# ஒரு எச்சரிக்கை!

என்ன, புத்தகத்தைப் புரட்டிப் பார்த்ததும் அப்படி முகத்தைச் சுளுக்கி விட்டீர்கள்! ஒருவேளை புத்தகத்துக்கு விலை அதிகம் என்று அபிப்பிராயப்படுகிறீர்களா, என்ன? "ஒரு நாள் கூத்து" என்னும் என் புத்தகத்தைப் பார்த்துவிட்டுச் சில அன்பர்கள் அப்படித் தான் சொன்னார்கள். அதே அன்பர்கள் வாயிலிருந்து "ஒரு நாள் கூத்து மலிவு" என்ற வார்த்தையை வரவழைத்து விட வேண்டுமென்பதற்காக இப்புத்தகத்தின் விலையை இன்னும் உயர்த்தி வைக்கவேண்டும் என்று முயற்சி செய்தேன்.

ஆனால் என் கூடவே இருந்து என் காரியங்களை யெல்லாம் கவனித்துவரும் படித்த பெண் சரசு இதற்கு இடங் கொடுக்கவில்லை. (இதற்குத்தான் "படித்த பெண் வேண்டாம்!" என்கிறேன்!)

பரவாயில்லை. கவலைப்படாதீர்கள். பின்னால் வரப்போகும் என் மற்ற புத்தகங்களைப் பார்த்து விட்டு நீங்கள், "தேவலையே! அந்தப்

ஒரு எச்சரிக்கை!

புத்தகங்களுக்கு இந்தப் புத்தகம் எவ்வளவோ மலிவு" என்று சொல்லப் போகிறீர்கள்.

அப்படியே அதிகம் என்று வைத்துக் கொண்டாலும் அதை இப்பொழுதே கொடுக்கச் சோம்பல் பட்டீர்களோ, பின்னல் எனக்கு நிதி திரட்டிய வேண்டிய அவசியம் ஏற்பட்டு, அப்பொழுது ஐம்பதோ, நூறே அழவேண்டி வந்து விடும். ஜாக்கிரதை!

தியாகராயநகர்
27—12—45

நாடோடி.

# பொருளடக்கம்

## நாடோடி எழுதிய நூல்கள்

நாடகமே உலகம்
பிழைக்கும் வழி
இதுவும் ஒரு பிரகிருதி
ஒரு நாள் கூத்து
அட பரமசிவா!
படித்த பெண் வேண்டாம்!
எங்கள் குடும்பம் பெரிது!
ஹே, அனுராதா!
என்னைக் கேளுங்கோன்னா! (அச்சில்)
புருஷர்களுக்கு மட்டும் (அச்சில்)
உலகம் பலவிதம் (அச்சில்)

# படித்த பெண் வேண்டாம்

என் தாயார் முதலிலிருந்தே அடித்துக் கொண்டாள். "வேண்டாமடா, வேண்டாமடா, பெரியவா சொல்றதைக் கேளடா. படித்த பெண் வேண்டாண்டா. காரியம் தெரிந்த பெண்ணாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கிறேண்டா" என்று கதறினாள்.

ஆனால் எனக்கு அப்பொழுது, "இது என்னடா பெரிய பயித்தியமாயிருக்கு" என்று தோன்றிற்று.

"என்ன அம்மா? என்னையும் அப்பாவைப் போல் கர்நாடகம் என்று நினைத்துக் கொண்டாயா, என்ன? காரீயமாம், வெள்ளீயமாம். பெண்ணுக்குப் படிப்பு வேண்டாம், அழகு வேண்டாம், ஒன்றும் வேண்டாம்; சமையல் ஒன்று தெரிந்தால் போதும் இல்லையா?" என்று கோபமாகச் சொன்னேன்.

"ஆமாண்டாப்பா. பின்னே வேறு எது வேண்டும்? சமையல், சாப்பாடு ஒன்றும் தெரியாமல் ஆம்படையான் ஆபீஸிலிருந்து வந்ததும் அவனுக்கு எதிரே சதிர் பண்ணிக் கொண்டிருந்தால் போதுமா? வயிறு நிரம்பி விடுமா? பசி அடங்கி விடுமா?" என்றெல்லாம் என் தாயார் அடுக்கிக் கொண்டே போனாள்.

ஒரே வார்த்தையில் தாயாரை மடக்கிவிட நினைத்து, "பெண்டாட்டிக்குத் தெரிய வேண்டிய முக்கிய காரியம்

சமையல் தான் என்றால், அதற்கு ஒரு சமையல்காரனைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விடலாமே!" என்றேன்.

நான் என்னமோ மிகவும் சாதுரியமாகத்தான் பதில் சொல்லி விட்டதாக நினைத்தேன். ஆனால் என் தாயாருக்கு என் சாதுரியத்தை மகிழ்ந்து கொள்ளத் தெரியவில்லை. திரும்பவும், திரும்பவும், "நான் சொல்றதைக் கேளுடா. படித்த பெண் வேண்டாண்டா. சொல்றதைக் கேளுடா" என்ற பழைய பல்லவியையே பாடிக் கொண்டிருந்தாள்.

இது விஷயம் எனக்கு மிகவும் தர்ம சங்கடமாய் இருந்தது. ஏனெனில் நான் ஒரு படித்த பெண்ணைக் கண்டு, அவளிடம் என் மனதைப் பறி கொடுத்து விட்டேன். பெண்ணின் பெயர் சரஸ்வதி. பெயருக்கேற்ப, படிப்பில் மிகச் சூடிக்கையாக விளங்கினாள். அழகிலோ லட்சுமி என்றே கூறவேண்டும். அழகுக்கு அழகு செய்வதுபோல் கண்ணில் மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தாள். அந்த மூக்குக் கண்ணாடியைக் கொண்டே அவள் எவ்வளவு தீவிரமாகப் படித்திருக்க வேண்டும் என்று நீங்கள் ஊகிக்கலாம். இன்டர்மீடியட் பாஸ் பண்ணியிருந்தாள். அதற்கு மேல் படிக்க வைக்க அவள் பெற்றோர்கள் மறுத்து விட்டபடியால் மேலே படிக்கவில்லை.

அவள் பாடினால் இன்றைக்கெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம்; அவள் கையில் வீணையை வைத்துக் கொண்டு மீட்டுவதைக் கேட்கும்போது தேவலோகத்தில் கின்னரர், கிம்புருடர் புடைசூழ வீற்றிருப்பதுபோலவே

தோன்றும். இத்தனை போதாதென்று பத்திரிகைகளுக்குக் கதைகள், கட்டுரைகள் முதலியன எழுதுவதில் பலே கெட்டிக்காரி. பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதுவதில் எனக்கு ஆர்வம் மிகவும் அதிகமாகையால் என் வாழ்க்கைத் துணைவியும் அப்படியே இருக்கவேண்டும் என்று நான் வெகு நாளாக ஆசைப் பட்டதுண்டு.

அத்துடன் வெகு நாளாகவே எனக்கு இன்னொரு ஆசை—காலையில் காப்பி குடித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் நம் மனைவி நம் எதிரே உட்கார்ந்து கொண்டு ஆங்கில தினசரிப் பத்திரிகை படித்துக் காட்ட வேண்டும் என்றும், அரசியல் சம்பந்தமான விஷயங்களை நம்முடன் சர்ச்சை செய்ய வேண்டும் என்றும் இருந்தது. இது விஷயத்திலும் சரஸ்வதி நான் ஆசைப்பட்டபடியே விளங்கினாள்.

பெண் பார்க்கப் போயிருந்த சமயத்தில் காப்பி கொண்டு வந்து கொடுத்தார்கள். உடனே நான் எதிரே நின்று கொண்டிருந்த பெண்ணை அருகில் இருந்த சோபா வில் உட்காரச் சொல்லி, அன்றைய தினசரிப் பத்திரிகை யின் தலையங்கத்தைப் படிக்கும்படி சொன்னேன். அப்படியே அவள் படிக்க ஆரம்பித்தாள்.

தலையங்கத்தில் பாகிஸ்தான் கொடுக்க வேண்டு மென்று எழுதியிருந்தது. பாகிஸ்தானாவது, கீகிஸ்தானாவது அதெல்லாம் கூடாது என்று நான் கூற; எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் பெரிய தர்க்கம் ஆரம்பித்து விட்டது.

பாகிஸ்தான் கொடுக்கக்கூடாது என்று நான் சொல்லி என் கையில் பாகிஸ்தான் இருப்பது போலவும், அதை

யாரோ பிடுங்க வருவது போலவும் நினைத்துக் கையைக் கெட்டியாக மூடிக் கொண்டேன்.

ஆனால், அந்தப் பெண்ணோ கொடுக்கத்தான் வேண்டுமென்று வாதாடினாள். "மாட்டுப் பெண் தனிக் குடித்தனம் வைக்கப் போகிறேன் என்று பிடிவாதம் பிடித்தால் பெற்றோர்கள் இணங்கத்தானே வேண்டும்?" என்ற உதாரணத்தை எடுத்துக் காட்ட ஆரம்பித்து விட்டாள்.

நல்ல வேளை, என் தாயார் கூட வராதிருந்தாளோ, நான் பிழைத்தேனோ! வாதம் முற்றி, மேலே எடுத்துக் காட்டுவதற்கு ஆதாரங்கள் ஒன்றும் கிடைக்காமல் போகவே, ஒருவரை ஒருவர் நிந்தித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டோம்.

அப்பெண் என்னை நிந்திக்க ஆரம்பித்தது, என் மூளை நிலையைப் பற்றிச் சந்தேகம் கொண்டது ஆகிய எல்லாம் எனக்கு முதலில் வருத்தம் அளிக்கத்தான் செய்தது. இருந்தாலும் இன்னொரு விதத்தில் அது எனக்கு மிகவும் திருப்தியாயிருந்தது. இவ்வளவு கெட்டிக்காரப் பெண் வேண்டுமென்று தானே நாம் இத்தனை நாளாகத் தவம் கிடந்தோம். இதோ கிடைத்து விட்டாளே என்று சந்தோஷம் ஏற்பட்டது. கட்டாயம் இவளைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வது என்றும் தீர்மானித்து விட்டேன்; ஒற்றைக் காலில் நிற்கவும் தயாராயிருந்தேன்.

இவ்வளவு கெட்டிக்காரப் பெண்ணுக்குச் சமையல் அதிகம் தெரியாது என்பது உண்மைதான். ஆனால், சங்கீதம், கல்வி இவற்றிலேயே அதிகம் கவனம் செலுத்தி

யிருக்கும் பெண்ணுக்குச் சமையல் விஷயத்தில் கவனம் செலுத்த எங்கே அவகாசம் கிடைத்திருக்கப் போகிறது? அதோடு சமையல் தெரியாவிட்டால்தான் என்ன கெட்டுப் போச்சு? பட்டணத்தில்தான் அடிக்கொரு ஹோட்டல் இருக்கிறதே. 'தாட் சாப்பாடு' வரவழைத்துக் கொண்டால் போச்சு என்று நினைத்தேன்.

சமையல் வேலை தெரிந்த பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று என் தாயார் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால், நான் மிகவும் பிடிவாதமாகக் கால் ஒடிந்தாலும் பரவாயில்லை என்று ஒற்றைக் காலில் நிற்கத் தொடங்கவே, "எக்கேடு கெட்டு எருக்கு முளைச்சுப் போ" என்று கூறிவிட்டாள். நானும் சரஸ்வதியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு பட்டணத்தில் குடித்தனம் பண்ணலானேன்.

பக்கத்தில் இருந்த ஹோட்டலி லிருந்தே இரண்டு வேளையும் சாப்பாடு வந்தது. காலையிலும், மாலையிலும் ஹோட்டலிலிருந்தே காப்பி, டிபன்! சமையல் வேலை இல்லாமல் போகவே வீட்டில் எப்பொழுது பார்த்தாலும் சங்கீத கோஷம்தான், புஸ்தகப் படிப்புதான், தையல் வேலைதான், பூ வேலைதான். அரசியல் விஷயங்களைப் பற்றித் தர்க்கங்கள்தான். எங்கள் தர்க்கங்கள் முற்றி, ஒருவரை யொருவர் நிந்தித்துக் கொள்ளும் போதெல்லாம், அண்டை அயல் வீட்டுக்காரர்கள் நாங்கள் சண்டை போடுவதாக நினைத்துக் கொண்டு ஓடிவந்து பார்ப்பார்கள். அது எங்கள் இருவருக்கும் மிகவும் வேடிக்கையாக இருக்கும். இம்மாதிரி என் வாழ்க்கை மிகச் சுகமாகக் கழிந்து கொண்டிருந்தது.

சில சமயங்களில் படிக்காத அடுப்பூதிப் பெண்களைக் கல்யாணம் பண்ணிக்கொண்டுள்ள என் நண்பர்களைப் பார்த்து நான் பச்சாத்தாபப் படுவதுண்டு. "அவர்களுடைய வாழ்க்கை என்ன வாழ்க்கை? புருஷனும், மனைவியும் சேர்ந்து பேசினோம், வாதித்தோம், விளையாடினோம் என்று உண்டா? பெண்டாட்டி எப்பொழுது பார்த்தாலும் அடுப்பங்கரையைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறாள். புருஷன் தன் நண்பர்களுடன் அரட்டை அடித்தபடி இருக்கிறான்" என்றெல்லாம் நினைப்பதுண்டு.

ஆனால் என் சுக வாழ்வு நெடுநாள் நீடிக்க வில்லை. வட இந்தியாவில் எனக்கு ஒரு வேலை கிடைத்தது. சரஸ்வதியையும் கூட்டிக் கொண்டு அந்த ஊர் போய்ச் சேர்ந்தேன். படிக்காத பெண்ணாயிருந்தால், "நான் முன்னால் போய் இடம் பார்த்து வைத்துக் கொண்டு பின்னால் எழுதுகிறேன். அப்பொழுது நீ புறப்பட்டு வரலாம்" என்று கூறலாம். ஆனால், படித்த பெண்ணிடம் அப்படிக் கூற முடியுமா?

ஊர்போய்ச் சேர்ந்ததும், எல்லோரும் குடி இருக்க வீடு இருக்கிறதா என்று தேடுவார்கள். ஆனால், நாங்கள் தேடிய முதல் விஷயம் அந்த ஊரில் நம் ஊர் ஹோட்டல் ஏதாவது இருக்கிறதா என்பதுதான். இதற்காக நானும் சரஸ்வதியும் ஒரு டாங்காவில் ஏறிக் கொண்டு, ஊரை ஒரு பத்து தடவை பிரதட்சணம் வந்தோம். ஆனால் நம் ஊர் ஹோட்டல் ஒன்றும் கிடைக்கவில்லை. "ஈஸ்வரா! நாம் எப்படி இந்த ஊரில் உயிருடன் வாழப் போகிறோம்!"

என்று தயங்கித் தவித்த சமயத்தில் சரஸ்வதி அபயக்குரல் கொடுத்தாள்.

"ஏன் இப்படிக் கலங்குகிறீர்கள்? நான் சமைத்துப் போடுகிறேன்." என்று சொன்னாள்.

என்னையே நான் நம்ப முடியாமல், "நிஜமாகவா!" என்றேன். "இது என்ன பிரமாதம்! எவ்வளவோ கடினமான விஷயங்களைக் கலாசாலையில் கற்றுத் தேறிய எனக்கு இதுதானா கஷ்டம்?" என்றாள்.

அப்படியே சரஸ்வதி அன்று முதல் சமைக்க ஆரம்பித்தாள். அன்றிலிருந்து எனக்கு என் தாயார் ஞாபகம் தான். "வேண்டாண்டா, படித்த பெண் வேண்டாண்டா, படித்த பெண் வேண்டாண்டா" என்று என் தாயார் படித்துப் படித்துச் சொன்னது என் காதில் ஒலித்துக் கொண்டேயிருக்க ஆரம்பித்து விட்டது.

"முதலில் போய் ஒரு ஸ்டவ் வாங்கிக்கொண்டு வருவோம், வாருங்கள்" என்றாள். சரியென்று கடையில் போய் விசாரித்தேன். யுத்தம் காரணமாக ஸ்டவ் மிகவும் விலை யுயர்ந்து விட்டது என்று தெரிந்தது. "என்ன பண்ணலாம்? இத்தனை விலை கொடுத்து வாங்கலாமா?" என்று கேட்டேன்.

"ரொம்ப அழகாயிருக்கிறது. இத்தனை விலை கொடுத்து வாங்குவானேன்? எல்லாம் குமுட்டி வாங்கி வைத்துக் கொண்டால் போதும்" என்று பதில் வந்தது.

"குமுட்டி அடுப்பு உனக்குப் பற்ற வைக்கத் தெரியாதே?"

"தெரியாதுதான். இருந்தாலும் அது என்ன பிரம்ம வித்தையா? நாலுநாள் பழகினால், தன்னைப்போல் தெரிந்து விடுகிறது."

என்ன இருந்தாலும் படித்த பெண் அல்லவா? நான்கே நான்கு நாட்களில் குமுட்டி பற்ற வைக்கும் வித்தையைக் கற்றுக்கொண்டு விட்டாள். ஆனால் தட்சணை கொடுக்காமல் ஒரு வித்தையைக் கற்றுக் கொள்ளலாமா? அதற்காக சரஸ்வதி பத்து ஸில்க் புடவையை அக்னி பகவானுக்கும், ஐம்பது ரூபாய் பீஸை டாக்டருக்கும் தட்சணையாகக் கொடுத்தாள். அவ்வளவுதான்.

அந்தப் பத்து புடவைகளின் விலையையும், டாக்டருக்குக் கொடுத்த பணத்தையும் சேர்த்தால் இருபது ஸ்டவ்கள் கூட வாங்கலாமென்பது உண்மைதான். ஆனால் இப்படியெல்லாம் கணக்குப் பார்க்கலாமா? பி. ஏ. யும், எம். ஏ. யும் படித்துவிட்டு ரூ. 25 சம்பளத்துக்குத் திண்டாடும்போது சிலர் சொல்வதுண்டு. "படிப்புக்கென்று செலவழித்த ரூ. 5000-த்தையும் வட்டிக்குப் போட்டிருந்தாலும் உட்கார்ந்த இடத்தில் இந்தப் பணம் வருமே" என்று. ஆனால் இந்தத் தர்க்க ரீதி சரியென்று எந்த வேலையில்லாப் பட்டதாரியாவது ஒப்புக் கொள்வாரா?

இது நிற்க. அடுப்புப் பற்ற வைக்கக் கற்றுக்கொண்டதும், சரஸ்வதி சமைக்க ஆரம்பித்து விட்டாள். முதலில் எப்படா அடுப்புப் பற்ற வைக்கக் கற்றுக்கொள்ளப் போகிறாள் என்று இருந்த எனக்கு, ஏண்டா அடுப்புப் பற்ற வைக்கக் கற்றுக் கொண்டாள் என்று ஆகிவிட்டது. ஒரு பெரிய புலவர் நொந்து கொண்டதைப்போல், எனக்

கும் "கல்லைத்தான், மண்ணைத்தான், காய்ச்சித்தான், குடிக்கத்தான் கற்பித்தானு" என்று கடவுளை நொந்துகொள்ளத் தோன்றிற்று.

ஆனுல் பாவம். அவரை நொந்து கொண்டுதான் என்ன பிரயோசனம்? அவர் மனிதர்களைச் சிருஷ்டி பண்ண ஆரம்பித்த சமயத்தில், இம்மாதிரி ஸ்திரீகளுக்கென்று காலேஜுகள் ஏற்படும் என்று கண்டாரா என்ன? தெரிந்திருந்தால், கட்டாயம் மண்ணையும், கல்லையும் காய்ச்சிக் குடிக்கும் திறமையைப் புருஷர்களுக்கு அளித்திருப்பார். ஆகவே அவரைக் குற்றம் சொல்லிப் பிரயோசனமில்லை. பெண்களுக்கென்று காலேஜும், ஹைஸ்கூல்களும் ஏற்படுத்தினுர்களே, அவர்களைத்தான் குற்றம் சொல்ல வேண்டும். அதே சமயம் அவர்கள் பள்ளிப் பையன்களுக்கும், காலேஜ் பையன்களுக்கும், சமையல் வேலையைக் கட்டாய பாடமாக வைத்துச் சொல்லித் தந்திருக்க வேண்டாமா?

இதிலிருந்தே ஸரஸ்வதி எப்படிச் சமைத்திருப்பாள் என்று நீங்கள் ஊகித்துக் கொள்ளலாம். ஒரே வார்த்தையில் சொல்லுகிறேனே, உலகில் அறுவகை ருசிதான் உண்டு என்று சொல்லுகிறவர்கள் சரஸ்வதி சமையலைச் சாப்பிட்டுப் பார்த்தார்களானுல் ஆயிரத்துக்கு மேற்பட்ட ருசிகள் உண்டு என்று சத்தியம் பண்ணுவார்கள்.

அப்பொழுதே என் தாயார் அடித்துக்கொண்டாள். "படித்த பெண் வேண்டாம்" என்று கதறினுள். ஆனுல், நான் கேட்கவில்லை. தாயார் சொன்ன வார்த்தையைத் தட்டியதற்காக நான் தினம் இப்பொழுது வைடமின்க

ளாகவே சாப்பிட்டுக் கொண்டு வருகிறேன். அரிசியோ, காய்கறிகளோ சரியாக வெந்தால் தானே அதில் இருக்கும் வைடமின்கள் எல்லாம் போய்விடுவதற்கு? ஆனால் இத்தனை வைடமின்களைச் சாப்பிட்டும் என்ன பிரயோஜனம்? உடல் நாளுக்கு நாள் இளைத்து வருகிறது. இந்த இடத்தை விட்டு, வேறு நம் ஊர் ஓட்டல்கள் உள்ள இடமாகப் பார்த்து மாற்றும்படி ஆபீஸ் அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டிருக் கிறேன். ஆனால் அவர்கள் கேட்பதாக இல்லை. போனால் போகிறார்கள். இன்னும் கொஞ்ச நாள் போனால், தன்னைப்போல அவர்களாகவே என்னைப் பார்த்து, "மெடிகல்" லீவில் ஊருக்கு அனுப்பி விடுகிறார்கள்!

# படித்த பெண்கள்

படித்த பெண் என்றால் எப்படி இருப்பாள்? படித்த பெண்ணுக்கு உள்ள லட்சணங்கள் என்னென்ன? என்னென்ன லட்சணங்கள் இருந்தால் படித்த பெண் என்று கூறலாம்?

இத்தகைய கேள்விகள் அடிக்கடி கேட்கப்படுகின்றன. ஆனால் இதுவரை யாரும் இவற்றுக்குச் சரியான பதில் அளித்ததாகத் தெரியவில்லை. காரணம், இது விஷயமாக ஆராய்ச்சிகள் நடத்தி முடிவு கண்டுள்ள பெரியோர்களிடையில் பெருத்த அபிப்பிராயபேதம் நிலவி வருவதுதான்.

தலையில் உள்ள வகிடு எவ்வளவுக் கெவ்வளவு கோணலாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு படித்த பெண் என்று நிச்சயிக்கலாம் என்று ஒரு சாரார் கூறுகிறார்கள். தலையில் எவ்வளவுக் கெவ்வளவு பின்னல்களும் கொண்டை ஊசிகளும் அதிகமாக இருக்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு படித்த பெண் என்று கொள்ளலாம் என்று இன்னொரு சாரார் அபிப்பிராயப்படுகிறார்கள்.

பின்னலைக் கொண்டு மதிப்பிடுகிறவர்களிலும் இரண்டு கட்சிகள் உண்டு. பின்னலை அவர்கள் முன் பக்கத்தில் தொங்க விட்டிருக்கிறார்களா, அல்லது பின்பக்கத்தில் தொங்க விட்டிருக்கிறார்களா என்பதிலிருந்து அவர்கள்

எவ்வளவு படித்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிக்கும் ஆராய்ச்சி நிபுணர்கள் எத்தனையோ பேர் இத்துறையில் உண்டு.

இன்னும் இப்பின்னலைக் கீழே நூலோ, ரிப்பனோ கொண்டு முடிபோடாமல் எத்தனை அங்குல நீளத்துக்குப் பின்னுமல் விட்டிருக்கிறார்கள் என்பதிலிருந்தும் படித்த பெண்ணா, இல்லையா என்று நிர்ணயிக்கும் பெரியோர்களும் இருக்கிறார்கள்.

சற்றுத் தூரத்தில் இருந்து கொண்டு நிர்ணயிப்பதற்குப் பதில் சற்றுப் பக்கத்தில் போயே நிர்ணயிக்க முடியுமானால், இந்தப் 'பின்னல் பரீட்சை'க்குப் பதில் 'பூப் பரீட்சை' வைத்துக்கொள்ளலாம் என்பது சில ஆராய்ச்சியாளர்களின் துணிபு.

பழைய காலத்துப் பெண்களுக்கும், தற்காலத்துப் படித்த பெண்களுக்குமுள்ள ஒரு பெரிய வித்தியாசத்தை அவர்கள் தலையில் அணிந்து கொள்ளும் பூவிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

பழைய காலத்துப் பெண்கள் சில பூக்களைத்தான் தலையில் வைத்துக் கொள்ளலாம், மற்ற பூக்களை வைத்துக் கொள்ளக்கூடாது என்று உலகில் உள்ள முக்கால் வாசிப் பூக்கள்மீது பட்சபாதம் காட்டி வந்தனர். இதற்கு அவர்கள் கூறிய காரணம் சில பூக்களுக்குத்தான் வாசனை இருக்கிறதென்றும், மற்றப் பூக்களுக்கு வாசனையில்லை யென்பதும்தான்.

ஆனால் இதைப்போலப் பயித்தியக்காரத்தனம் வேறு கிடையாது என்பது தற்கால ஸ்திரீகளின் கருத்து. வாசனை

அவசியமில்லை, அழகுதான் அவசியம் என்று அவர்கள் வாசனையில்லாத பூக்களாகப் பார்த்து அணிய ஆரம்பித்தார்கள்.

முதலில் இந்தப் பூக்கள் வாசனையற்றிருந்தபோதிலும் அழகுடன் விளங்கின. ஆனால் போகப் போக அதுவும் போய் விட்டது. இப்பொழுதெல்லாம் ஸ்திரீகள் தாங்கள் தலையில் அணியும் பூ தாங்கள் கட்டிக் கொண்டிருக்கும் புடவைக் கலருக்கு 'மாச்' பண்ணுகிறதா என்று கவனிக்கிறார்களே யொழிய, அழகாய் இருக்கிறதா என்று கவனிப்பதே யில்லை. சில ஸ்திரீகள் ஊமத்தம் பூவைக்கூட அணிந்து கொள்ளுவதாகச் சில நிபுணர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். தாங்கள் கட்டிக் கொள்ளும் வெள்ளைப் புடவைக்கு அதுதான் சரியான 'மாச்' என்பது அவர்கள் அபிப்பிராயமோ, என்னமோ!

மல்லிகை, முல்லை, ரோஜாபோன்ற அழகிய வாசனைப் புஷ்பங்கள் தற்காலப் பெண்களின் தலைக்கு ஏறுவதே இல்லை. அவர்கள் இப் புஷ்பங்களை ஒதுக்கித் தள்ளப் போகக் கோவிலில் எழுந்தருளியிருக்கும் விக்ரகங்களின் பாடு கொண்டாட்டமாகி விட்டது!

ஸ்திரீகள் அணிந்து கொள்ளும் ஜோலாக்கி லிருந்து அவர்கள் படித்த பெண்களா, இல்லையா என்று கண்டு பிடித்துவிடலாம் என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். ஜோலாக்கு எவ்வளவுக் கெவ்வளவு தோள்பட்டையை இடிக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு படித்த பெண்கள் என்று இவர்கள் நிர்ணயிக்கிறார்கள்.

தலையைக் கொண்டு மதிப்பிடுவதைவிட முகத்தைக் கொண்டு மதிப்பிடுவதுதான் சரி என்பது இன்னொரு

கூட்டத்தாரின் அபிப்பிராயம். இந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களை நாம் அடிக்கடி தெருவில் பார்க்கலாம்.

எந்தப் பெண் தெருவில் போனாலும் சரி, இந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் கூர்ந்து கவனிப்பார்கள். அதிலும் முகத்தை மிகவும் உன்னிப்பாய்க் கவனிப்பார்கள். விஷயம் தெரியாதவர்கள் இவர்கள் ஏதோ விகல்ப புத்தியோடு பார்ப்பதாக நினைத்துக் கொள்வார்கள். ஆனால் உண்மை இதுவல்ல. முகத்தில் உள்ள பவுடர் எத்தனை அங்குலம் உயரம் இருக்கும் என்று கண்டு பிடிக்கும் நல்ல நோக்கத்துடன்தான் இவர்கள் தெருவில் போகும் பெண்களை யெல்லாம் உற்றுக் கவனிக்கிறார்கள்.

பெண்கள் அப்பிக் கொண்டிருக்கும் பவுடரின் உயரம் ஒரு அங்குலம் இருந்தால் எஸ். எஸ். எல். சி. தேறினவள், பவுடர் இரண்டு அங்குல உயரம் இருந்தால் இன்டர் மீடியட் தேறினவள், மூன்று அங்குல உயரம் இருந்தால் பி. ஏ. தேறினவள் என்றெல்லாம் இவர்கள் கணக்கெடுத்து வைத்துக்கொண் டிருக்கிறார்கள் என்று கூடக் கேள்வி.

இன்னொரு சாரார் இருக்கிறார்கள். ஒரு பெண் படித்த பெண்ணா, இல்லையா என்பதைத் தலையைக்கொண்டு மதிப்பிடுவது தவறு, காலைக் கொண்டு மதிப்பிடுவதுதான் சரி என்பது இவர்கள் சித்தாந்தம். அதன்படி இவர்கள் எந்தப் பெண் எதிரே வந்தாலும் சரி, தலையை நிமிர்ந்து நோக்கமாட்டார்கள்.

விஷயம் தெரியாதவர்கள், இவர்களை மிக யோக்யர்களென்றும், பரஸ்திரீகளைப் பார்க்க விரும்பாதவர்கள்

என்றும் கூறுவது உண்டு. ஆனால் உண்மை இதுவல்ல. பெண்கள் அணிந்திருக்கும் பூட்ஸ்களின் குதிகால் உயரம் எத்தனை அங்குலம் இருக்கும் என்று கண்டு பிடிப்பதற்குப் பெண்களின் காலைக் கவனிக்காமல் முகத்தைக் கவனித்து என்ன பயன்?

ஆனால் இந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் கொஞ்ச காலமாக பூட்ஸ் குதிகாலைக் கவனிப்பதில்லை. இதே விஷயத்தை இன்னொரு விதத்தில் கண்டு பிடிப்பதற்கு ஒரு சிறு உபாயம் இக்கூட்டத்தைச் சேர்ந்த ஒரு மேதாவி கண்டு பிடித்திருக்கிறார்.

வெகு நாள் ஆராய்ச்சியின் பேரில் இவர் ஒரு தத்துவத்தைக் கண்டுபிடித்தார். பெண்கள் பூட்ஸின் குதிகாலின் உயரத்திற்கும், அவர்கள் இடுப்பண்டை அவர்கள் உடம்பு இரண்டு நேர் பாகங்களாகப் பிரிந்து அதனால் ஏற்படும் கோணத்திற்கும் ஒரு நேர் சம்பந்தம் இருக்கிறது என்று இவர் கண்டுபிடித்து இது விஷயமாகப் படங்கள் முதலியன தயாரித்து வைத்திருக்கிறார்.

ஆனால் தெருவில் நாம் பார்க்கும் முக்கால் வாசிப் பெண்கள் இம்மாதிரி இல்லாமல் ஆங்கில எழுத்து 'எஸ்' ஸைப்போல் வளைந்து காண்கிறார்களே என்று சிலர் கேட்கலாம். அவர்கள் குழந்தையைத் தூக்குவதுபோல் தூக்கிச் செல்லும் புஸ்தகங்கள் அவர்களை முன்னுக்குத் தள்ள, குதிகால் பூட்ஸ் பின்னுக்குத் தள்ள, அவர்கள் 'எஸ்' ஸைப் போல் வளையாமல் 'ங'ப்போலா வளைவார்கள்?

சமீப காலத்தில் ஒரு புது ஆராய்ச்சிக் கூட்டத்தார் தோன்றியிருக்கிறார்கள். ஒரு பெண் படித்த பெண்ணா,

இல்லையா என்று கண்டு பிடிப்பதற்கு இவர்கள் காலையும் பார்க்க மாட்டார்கள், தலையையும் பார்க்கமாட்டார்கள், முழங்கையைத்தான் பார்ப்பார்கள். முழங்கையிலிருந்து ரவிக்கையின் கை எவ்வளவுக்கெவ்வளவு மேலே தள்ளி யிருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு படித்த பெண் என்பது இவர்கள் முடிவு.

இதுவரை சொன்னதெல்லாம் தெருக்களில் நாம் சந்திக்கும் பெண்கள் படித்த பெண்களா, இல்லையா என்று கண்டு பிடிப்பதற்குத்தான். ஆனால் வீட்டுக்குள் இருக்கும் பெண்கள் படித்த பெண்களா, இல்லையா என்று கண்டு பிடிக்க வேறு சில வழிகள் இருக்கின்றன.

இது விஷயமாக நானே என் சொந்த அனுபவத்தைக் கொண்டு ஆராய்ச்சிகள் செய்து வைத்திருக்கிறேன்.

சரசு படித்த பெண் என்பது உங்கள் எல்லோருக்கும் தெரிந்த விஷய மாதலால் அவள் வீட்டில் எப்படி காட்சி யளிக்கிறாள் என்பதிலிருந்தே மற்றப் படித்த பெண்களும் வீட்டில் எப்படி காட்சி யளிப்பார்கள் என்று நீங்கள் ஊகித்துக் கொள்ளலாம்.

முதலில் தலை 'ஹோ' வென்று பரட்டையாக விளங் கும். படித்த பெண்கள் வெளியில் எவ்வளவுக்கெவ்வளவு அலங்காரமாக விளங்குகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு வீட்டில் அலங்கோலமாக விளங்குவார்கள். வீட்டில் யாராவது ஒரு பெண் விரித்த சடையுடனும், கறுத்த முகத் துடனும், (பவுடர் இல்லாததால் முகம் கறுப்பாகத்தான் காணப்படும்) காணப்பட்டால் உடனே படித்த பெண் என்று தீர்மானித்து விடுங்கள்.

இரண்டாவதாக கைகள் வளையலின்றி மொட்டை யாக விளங்கும். பழைய காலத்து ஸ்திரீகளைப்போலத் தற்கால ஸ்திரீகள் எப்பொழுது பார்த்தாலும் கையில் வளையல்களை அணிந்து கொண்டிருப்பதில்லை. வெளியே போகும்போது மட்டும் கட்டிக்கொள்ளும் புடவையின் கலருக்கு ஏற்றபடி வளையல்களை, ஒரு தங்க வளை, ஒரு கலர் கண்ணாடி வளை என்று மாற்றி, மாற்றி அணிந்து கொள் வார்கள்.

கழுத்தில் ஒரே ஒரு தாலிச் சரடு மாத்திரம் இருக்கும். மற்ற நகைகள் எல்லாம் மெருகு குறையாமல் பெட்டியில் இருக்கும். "கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்னும் மூதுரைக்கு உதாரணமாக விளங்குவதேபோல் இடுப்பில் வெள்ளை வெளேர் என்ற ஒரு புடவை குறைந்தது இருபது இடங்களிலாவது கிழிந்து தைக்கப்பட்டிருக்கும்.

அத்தனைக்கும் சரசு வாங்கும் புடவைகளுக்குக் கணக்கே இல்லை. வாரத்துக்கொரு தடவை அவளும் பக்கத்து வீட்டுப் படித்த பெண்களும் ஒவ்வொரு புடவைக் கடையாக நுழைந்து புறப்படுகிறார்கள். மாதத்துக்கு இரண்டு தடவைக்குக் குறையாமல் புடவை வாங்குகிறார் கள். வாங்கினால் எல்லாருக்கும் ஒரே மாதிரியான புடவை. இவர்கள் நடுவில், நடுவில் சேர்ந்து 'வாக்கிங்' போவதைக் கவனித்தால், ஏதோ ஸ்திரீகள் ராணுவப் படை புதுவித 'யூனிபாரம்' அணிந்து செல்வதுபோலவே இருக்கும்.

இத்தனை புடவைகள் வாங்குகிறாளே யொழிய சரசு என் கண் குளிர, ஒரு நாளாவது நல்ல புடவை கட்டிக் கொள்கிறாள் என்கிறீர்களா? கிடையாது, கடை பீரோ

வில் இருந்த புடவைகள் இப்பொழுது எங்கள் வீட்டுப் பீரோவில் இருக்கின்றன. என் டிராயரில் இருந்த பணம் புடவைக் கடைக்காரன் டிராயரில் இருக்கிறது. அவ்வளவு தான்.

படித்த பெண்களைப்பற்றி நான் எழுதி வைத்திருக்கும் ஆராய்ச்சிகள் இன்னும் எத்தனையோ இருக்கின்றன. ஆனால்............அதோ சரசு வருகிறாள். இதை வாசித்துப் பார்த்தாளானால் என் காப்பி வாயில் மண்ணைப்போட்டு விடுவாள். ஆகவே இத்துடன் கட்டுரையை நிறுத்திக் கொள்கிறேன்.

# செக்ஷன் 144

ஒரு நாள் செக்ஷன் 144-க்குப் பொழுதே போக வில்லை. முன்னெல்லாமாவது அதன் தயவு சர்க்காருக்கு அடிக்கடி வேண்டி யிருந்தது. நினைத்தால், "உடனே புறப்பட்டு வா" என்று தந்தி யடிப்பார்கள். பொது ஜனங்களும் அதைக் கண்டு நடுங்குவார்கள்.

ஆனால் யுத்தம் வந்தாலும் வந்தது, செக்ஷன் 144-ன் செல்வாக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து விட்டது. அதை இப்பொழுது சீந்துவார் கிடையாது. செக்ஷன் 144-க்குப் பதில் இந்தியத் தற்காப்புச் சட்டம் என்னும் புது ஆள் சர்க்காருக்கு வேண்டியவனாகி விட்டான்.

இதையெல்லாம் நினைத்துப் பார்த்தபோது செக்ஷன் 144-க்குக் கண்களில் ஜலமே வந்து விட்டது.

சரி, கடற்கரைக்காவது போய்ச் சற்று நிம்மதியாக இருந்து துக்கத்தை மறந்துவிட்டு வருவோம் என்று செக்ஷன் 144 பஸ் ஸ்டாண்டை நோக்கிப் புறப்பட்டது.

பஸ் ஸ்டாண்டில் செக்ஷன் 144 கால் ஒடிய நின்றது தான் மிச்சமே யொழிய, அந்தப் பக்கமாக வந்த ஒரு பஸ்ஸும் அங்கு நிற்கவில்லை. எல்லாப் பஸ்களிலும் அளவுக்கு மீறியே கூட்டம் இருந்தது.

இதைப் பார்த்ததும் செக்ஷன் 144-க்கு உண்டான கோபம் சொல்லி முடியாது. "பஸ்கள் நிற்கும் இடம்" என்று போட்டிருக்கும் பலகையை "பஸ்கள் நிற்காத இடம்" என்று மாற்றி விடலாமா என்று கூட அதற்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

ஜனங்கள் இந்தமாதிரி ஆத்திரப்பட்டு, ஏதாவது செய்து விடுவார்கள் என்று எதிர்பார்த்தோ, என்னமோ, பஸ் கம்பெனிக்காரர்கள் அநேக பஸ் ஸ்டாண்டுகளில் பழைய போர்டுகளை எடுத்து விட்டுப் புதுப் போர்டுகள் நாட்டி வைத்திருக்கிறார்கள். இந்தப் புதுப் போர்டுகளில் ஒரு பஸ்ஸின் உருவப் படத்தை மாத்திரம் போட்டு வைத் திருக்கிறார்கள். பஸ் நிற்குமா, நிற்காதா என்று ஒரு தகவலும் கொடுக்க வில்லை!

ஆனால் செக்ஷன் 144 ஆத்திரத்துடன் போர்டு பக்கம் திரும்பினதுதான் தாமதம், ஒரு பஸ் வந்து நின்றது. பஸ்ஸிலிருந்து இறங்க வேண்டியவர்கள் எல்லாம் இறங்கினதும், ஏற வேண்டியவர்கள் எல்லாம் ஒருவர்க் கொருவர் முண்டி யடித்துக்கொண்டு ஏறினார்கள்.

பஸ்ஸில் எல்லா இடங்களிலும் ஜனங்கள் உட்கார்ந் திருந்தார்கள். இன்னும் நடுவில் வேறு வளையத்தைப் பிடித்துக் கொண்டு தொங்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது ஒரு ஆசாமி எல்லாரையும் முண்டி யடித்துக் கொண்டு, துவைத்து, மிதித்துக் கொண்டு உள்ளே நுழைந்தார். அந்த ஆசாமி வெகு அலட்சிய மாக ஜனங்களை மிதித்துக் கொண்டு போனதைப் பார்த்து பஸ் கண்டக்டராக்கும் என்று செக்ஷன் 144 நினைத்தது.

அந்த ஆசாமி நின்று கொண்டிருந்த பிரயாணிகளை ஒவ்வொருவராக எண்ணினார். ஆறு எண்ணியதும், மீதிப் பின்னால் இருந்த எல்லாரையும் கழுத்தைப் பிடித்துக் கீழே தள்ளி, "அடுத்த பஸ்ஸில் வாருங்கள்" என்று சொன்னார். நல்ல வேளை, செக்ஷன் 144 ஒரே ஒரு எண்ணிக்கையில் தப்பித்தது. ஏனெனில் அதுதான் ஆறாவது நபராக நின்று கொண்டிருந்தது!

எத்தனை பேர் வந்தாலும் ஏற்றிக் கொள்ளும் பஸ்ஸில் ஏன் இப்படிக் கழுத்தைப் பிடித்துத் தள்ளுகிறார்கள் என்று கேட்பதற்காக செக்ஷன் 144 தலையை நிமிர்ந்தது.

தலையை நிமிர்ந்ததுதான் தாமதம், ஆச்சரியத்தினால் அதன் கண்கள் அகல விரிந்தன. பிரயாணிகளைக் கழுத்தைப் பிடித்துக் கீழே தள்ளிய ஆசாமியைப் பார்த்து, "அட பாவி! நீயா!" என்றது செக்ஷன் 144.

செக்ஷன் 144 பார்த்து ஆச்சரியப்பட்ட ஆசாமி, பஸ் கண்டக்டர் அல்ல, இந்தியத் தற்காப்புச் சட்டம்!

"நீ எதற்காக அப்படிப் பிரயாணிகளைப் பிடித்துக் கீழே தள்ளினாய்?" என்று செக்ஷன் 144 இந்தியத் தற்காப்புச் சட்டத்தைப் பார்த்துக் கேட்டது.

"எனக்கு இப்பொழுது இந்த வேலைதான் கொடுத்திருக்கிறார்கள். பஸ்ஸில் நிற்கும் பிரயாணிகள் ஆறு பேருக்குமேல் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது என் வேலை. அதோ அந்த போர்டைப் பாரும்" என்று 'சுருட்டுக் குடிக்காதே' 'தயவு செய்து டிக்கட் கேளுங்கள்' என்று எழுதப்பட்டிருந்ததற்குப் பக்கத்தில், "இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் கீழ் இந்த

பஸ்ஸில் ஆறுக்குமேல் நிற்கும் பிரயாணிகளை ஏற்றக் கூடாது" என்றிருந்த போர்டை இந்தியத் தற்காப்புச் சட்டம் வெட்கத்துடன் காண்பித்தது.

இதைப் பார்த்ததும் செக்ஷன் 144-க்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. ஒரு காலத்தில் மகாத்மாஜி, ராஜாஜி, பண்டிட்ஜி முதலியவர்களைக் கைது செய்ய உபயோகமா யிருந்த இந்தியத் தற்காப்புச் சட்டம்தானா இப்பொழுது கேவலம் இந்த பஸ் கண்டக்டர் வேலை பார்க்கிறது என்று நினைத்துப் பார்த்தபோது அதற்கு ஏற்பட்ட சந்தோ ஷத்தில் பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி உல்லாசமாகச் சீட்டி யடித்துக் கொண்டே வீடு திரும்பியது.

# வைர மோதிரம்

வருஷா வருஷம், தவருது, "தீவளிக்குத் தீவளி" புடவையும், வேஷ்டியும் அனுப்பிக் கொண்டிருந்த மாமனுர் இந்த வருஷம் அனுப்பவில்லை....

இந்த வாக்கியத்தைப் படித்துவிட்டு, என் மாமனுர், உடனே மாமியாரைக் கூப்பிட்டு, "அடியே! உன் மாப்பிள்ளை யோக்கியதையைப் பாரடி! இந்தத் தீபாவளிக்கு நாம் வழக்கம் போல் புடவையும், வேஷ்டியும் அனுப்பி யிருக்க, அனுப்பவே யில்லை என்று புத்தகத்தில் எழுதி யிருக்கிருனே!" என்று ஆத்திரமாகக் கதறும் காட்சி என் மனக் கண்ணுக்குத் தோன்றுகிறது.

"நான்" என்று போட்டுக் கொண்டு எழுதுவதில் இதுதான் ஒரு பெரிய தொல்லை! கட்டுரைக்காக ஏதாவது எழுதினேமானல் தங்களைப் பற்றித்தான் எழுதியிருக்கிறேம் என்று நினைத்துக் கொண்டு உறவினர்களும் நண்பர்களும் சண்டைக்கு வந்து விடுகிருர்கள்!

ஐயா மாமனுரே! தாங்கள் இந்த தீபாவளிக்காக அனுப்பிய புடவையும், வேஷ்டியும் வந்து சேர்ந்தன. அதற்காக மிகவும் வந்தனம். இந்தக் கட்டுரை தங்களைப் பற்றித்தான் எழுதியிருக்கிறேன் என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். இதில் கண்டுள்ள எல்லா விஷயங்களும் கற்பனை. ஏன், 'நான்' கூடக் கற்பனைதான். ஆகவே

ஏதோ, தங்களைப் பற்றித்தான் எழுதியுள்ளேன் என்று நினைத்துக் கோபித்துக் கொண்டு, அடுத்த வருஷம் புடவையும், வேஷ்டியும் அனுப்பாமல் இருந்து விடாதீர்கள்!

இப்படி அவர் அனுப்பாததற்குக் காரணம், சென்ற தீபாவளியிலிருந்து அவர் என்மீது கோபம் கொண்டிருப்பதுதான். கோபத்துக்குக் காரணத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

போன தீபாவளியன்று என் மாமனார் எனக்கு ஒரு வைர மோதிரம் "வாங்கிப் போட்டார்."

அதாவது, தீபாவளிக்கு முந்தி ஒரு மாதம் இருக்கும், திடீரென்று ஒரு நாள் என்னைத் தேடிக் கொண்டு வந்தார். குசலப் பிரச்னம் ஆனதும் தம் பையில் இருந்து ஒரு நகைப் பெட்டியை எடுத்தார்! பெட்டியைத் திறந்தால் உள்ளே ஒரு வைர மோதிரம்!

அந்த மோதிரம் வைக்கப் பட்டிருந்த ஜாஜ்வல்யமான நகைப் பெட்டி கண்ணைப் பறித்துக் கொண்டு போயிற்றென்றால், அந்த மோதிரத்தைப் பற்றி என்னத்தைச் சொல்ல? இந்தக் காலத்தில் நகைப் பெட்டியின் விலை மதிப்பைக் கொண்டு தானே நகையை மதிப்பிடுகிறார்கள்? இந்த ரீதியில், மோதிரம் (அதாவது பெட்டி உள்பட) மிகவும் விலை யுயர்ந்ததாய் இருக்கவேண்டும் என்று ஊகித்தேன்.

மோதிரத்தையும், என்னையும் மாமனார் மாறி மாறிப் பார்த்தார். இதன் கருத்து என்னவென்று எனக்கு விளங்கவில்லை. "ஒன்றும் புரியவில்லையே!" என்னும் பாவனையில் முகத்தைச் சுளுக்கினேன்.

"என்ன மாப்பிள்ளை! மோதிரம் பிடித்திருக்கிறதா?"

"எனக்குப் பிடித்தால் என்ன, பிடிக்காவிட்டால் என்ன! யார் போட்டுக் கொள்ளப் போகிறார்களோ, அவர்களுக் கல்லவா பிடிக்கவேண்டும்?"

"அதே காரணத்தைக் கொண்டு தான் உங்களைக் கேட்கிறேன், பிடித்திருக்கிறதா இல்லையா என்று. மோதிரம் உங்களுக்குத்தான் மாப்பிள்ளை! தீபாவளியன்று கொடுப்பதற்காக வாங்கி வைத்திருக்கிறேன்."

"எனக்கா?........மோதிரமா?........அதுவும் வைர மோதிரமா?....எதற்காக?" என்று மிகவும் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"என்ன மாப்பிள்ளை, இப்படி ஆச்சரியப்படுகிறீர்? கல்யாணத்தின் போது நான் உமக்குக் கொடுத்த வாக்குறுதி ஞாபகம் இல்லை?....மறந்து விட்டீரா, என்ன?"

"வாக்குறுதியா? தாங்கள் அளித்த வாக்குறுதியா? எது?" என்று திரும்பவும் ஆச்சரியத்துடன் கேட்டேன்.

ஏனெனில், "ஆயிரம் பொய் சொல்லி ஒரு தாலியைக் கட்டு" என்று ஒரு வசனம் சொல்வார்களே, அந்த வசனத்தில் என் மாமனாருக்கு மிகவும் நம்பிக்கை உண்டு. தாலியை சரசுவின் கழுத்தில் கட்டுவதற்கு, (சரசுவை என் கழுத்தில் கட்டுவதற்கு என்று சொன்னாலும் பொருந்தும்) அவர் ஆயிரம் பொய் அல்ல, இரண்டாயிரம் பொய் அல்ல பதினாயிரம் பொய்யே சொல்லி விட்டார். ஒரு வேளை தாலி, ஒன்றுக்குப் பத்தாகக் கெட்டியாக இருக்கட்டும் என்றுதான் இப்படிச் செய்தாரோ, என்னமோ?

இப்படி அவர் சொன்ன பத்தாயிரம் பொய்களில் ஐயாயிரம் அப்பொழுது என் மனைவியாக வாய்க்க இருந்த, அதாவது இப்பொழுது என் மனைவியாக வாய்த்துள்ள, சரசுவின் ரூபலாவண்யங்கள், குண விசேஷங்கள், கல்வி, கேள்விகள் இவற்றைப் பற்றியது. மீதி ஐயாயிரம் அவர் எனக்குச் செய்யப்போகும் சீர் வரிசைகளைப் பற்றியது.

ஆனால், சரசுவின் கழுத்தில் தாலி ஏறினதும், அவர் எனக்குச் செய்த அத்தனை வாக்குறுதிகளையும் காற்றில் பறக்க விட்டு விட்டார். நானும் கலியாணம் என்றால் இப்படித்தான் பொய் சொல்வார்கள் போலும் என்று நினைத்து அவற்றை யெல்லாம் மறந்து விட்டேன்.

ஆகவே என் மாமனார், இப்பொழுது, கலியாணம் கடந்த இத்தனை வருஷங்களுக்குப் பிறகு, 'கலியாணத்தின் போது கொடுத்த வாக்குறுதி' என்றதும் எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை அல்லவா?

ஆனால் நான் இப்படி ஆச்சரியப் பட்டது என் மாமனாருக்கு ஆச்சரியத்தை விளைவித்தது என்று பட்டது.

"என்ன மாப்பிள்ளை இப்படிக் கேட்கிறீர்? நான் கல்யாணத்தின் போது உங்களுக்கு வைர மோதிரம் போடுவதாகச் சொன்னேனே, ஞாபகம் இல்லை?" என்று கேட்டார்.

"ஊஹூம். சொன்னேளா?....சரி."

"அது தான் உங்களுக்காக வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். பிடித்திருக்கிறதா, பாரும்."

மோதிரத்தை எடுத்துப் பார்த்தேன். கண்ணுக்குப் பிடித்திருந்தது. மோதிர விரலில் போட்டுப் பார்த்தேன். விரலுக்கும் பிடித்திருந்தது.

மோதிரம் பிடித்திருந்தது என்றதும் மாமனுர் பட்ட சந்தோஷம் கொஞ்ச நஞ்சமல்ல. என்னமோ, தமக்குத் தான் தம் மாமனுர் வைர மோதிரம் வாங்கிப் போட்டது போல் அத்தனை சந்தோஷத்துடன் ஊர் திரும்பினுர். ஆம், வைர மோதிரத்துடன் தான். வைர மோதிரத்தைப் பெற்றுக் கொள்வதற்காக, நானும், சரசுவும் அந்த தீபாவளிக்கு மாமனுர் வீட்டுக்குப் போவதாக எங்களுக்குள் ஏற்பாடு.

என் மாமனுர் அந்த வைர மோதிரத்தை எங்களிடம் காண்பித்ததுதான் தாமதம், என் தம்பிக்கு உடனே தன் மாமனுர் ஞாபகம் வந்து விட்டது. உடனே அவன் அவருக்குச் சகஸ்ர நாம அர்ச்சனை செய்ய ஆரம்பித்து விட்டான். தனக்குத் தன் மாமனுர் இம் மாதிரி வைர மோதிரம் போடாமல் தங்க மோதிரம் போட்டு ஏமாற்றி விட்டாரே என்று அவரை நொந்து கொண்டான்.

ஆனுல், பார்க்கப் போனுல், என் தம்பி, தன் மாமனுர் மீது குற்றம் சாட்டியது மிகவும் தவறு. ஏனெனில், உண்மையில் அவர் ஏமாற்றவில்லை. அவர் மிகவும் கண்டிப்புப் பேர் வழி. தங்க மோதிரம் தான் போடுவேன் என்று கண்டிப்பாகச் சொன்னுர். அப்படியே தங்க மோதிரமே கண்டிப்பாகப் போட்டார். "ஆயிரம் பொய் சொல்லித் தாலியைக் கட்டவேண்டும்" என்ற விஷயம் என் மாமனுருக்குத் தெரிந்திருந்ததுபோல் அவருக்குத் தெரிந்திருக்கவில்லை.

வைர மோதிரத்தை எடுத்துக் கொண்டு மாமனார் ஊருக்குக் கிளம்பியதுதான் தாமதம், எப்பொழுது தீபாவளி வரப்போகிறது, எப்பொழுது நாம் அந்த வைர மோதிரத்தைக் கையில் அணியப் போகிறோம் என்று நான் நாட்களை எண்ண ஆரம்பித்து விட்டேன்!

கடைசியில் தீபாவளி வந்தது, ஆனால் வைர மோதிரம் வரவில்லை! அதாவது முதலில் காட்டிய வைர மோதிரம் வரவில்லை. அதற்குப் பதில் வேறு ஏதோ ஒரு வைர(?) மோதிரம் வந்தது.

தானம் கிடைத்த மாட்டைப் பல்லைப் பிடித்துப் பார்க்கக் கூடாது என்று சொல்வார்கள். ஆனால், எனக்குக் கிடைத்தது மாடல்ல, மோதிர மாதலால் அதைச் சற்றுக் கண்ணை விழித்தே பார்த்தேன். மோதிரமும் என்னைப் பார்த்துப் பல்லை இளித்தது. முதலில் ஒரு நல்ல மோதிரம் காண்பித்து விட்டு, இப்பொழுது ஒரு மட்ட ரக மோதிரத்தை நம் தலையில் கட்டப் பார்க்கிறாரே என்று எனக்கு ஒரு கணம் இருந்தது. எதற்காக இப்படிச் செய்தார் என்றும் புரிய வில்லை.

ஒரு வேளை கல்யாணத்துக்காக அவர் சொன்ன பத்தாயிரம் பொய்களில் ஒன்று குறைந்து விட்டது என்று கணக்குப் போட்டுக் கண்டு பிடித்து, அதை ஈடு செய்யத் தீர்மானித்தாரோ, என்னவோ?

"மோதிரத்தைப் போட்டுக் கொள்ளுங்கள், மாப்பிள்ளை" என்றார் மாமனார். நானும் மோதிரத்தைப் போட்டுக் கொண்டேன். ஆனால் மோதிரத்தைப் போட்டுக் கொண்டதுதான் தாமதம், கையை இறுக மூடிக்

கொண்டு விட்டேன்! "கங்கா ஸ்நானம் ஆச்சா?" என்று விசாரிப்பதற்காக மாமனாருடன் யார் யாரையோ போய்ப் பார்த்தேன், எல்லாரிடமும் மோதிரத்தைக் காண்பித்தேன். ஆனால் மூடின கையை மாத்திரம் திறக்கவே யில்லை.

இது விஷயம் என் கடைசி மச்சினனுக்குத் தெரிந்ததும், "அத்திம்பேர் கையில் ஏதோ ஒளித்து வைத்திருக்கிறார்" என்று வீடு முழுவதும் தகவல் பரப்பி விட்டான். என் மாமனார் வந்து பார்த்தார். நான் கையை மூடிக் கொண்டு தான் இருந்தேன். என் மாமியார் வந்து பார்த்தாள். அப்பொழுதும் நான் மூடின கையைத் திறக்கவே யில்லை. பிறகு என் மச்சினன்மார்கள் எல்லாரும் ஒவ்வொருவராக வந்து பார்த்தார்கள். சிலர் என் மூடின கையைத் திறந்து, அதில் என்ன ஒளித்து வைத்திருக்கிறேன் என்று பார்த்து விடுவது என்றும் பிரயத்தனப் பட்டார்கள். ஆனால் நான் கையைத் திறக்கவே யில்லை. இதைப் பார்த்து விட்டு, என் மாமனாரும், மாமியாரும் தங்களுக்குள் குசு, குசு, என்று பேசிக் கொண்டார்கள்.

"என்ன, மாப்பிள்ளை உங்களுக் கென்று ஏதோ சாமான் கொண்டு வந்து, அதைக் கையில் ஒளித்து வைத்திருக்கிறார் போலிருக்கே!" என்றாள் மாமியார்.

"ஆமாம், எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால், அது என்ன வென்றுதான் தெரியவில்லை" என்றார் மாமனார்.

"என்ன, அது என்ன என்று தான் மாப்பிள்ளையைக் கேளுங்களேன். ஒரு வேளை சொல்வதற்குச் சங்கோஜப் பட்டுக் கொண்டிருக்கிறாரோ என்னமோ!"

உடனே மாமனார் என்னைத் தேடிக்கொண்டு வந்தார்.

"என்ன மாப்பிள்ளை! கையில் என்னமோ மூடி வைத்துக்கொண் டிருக்கிறீர்களே, என்ன?" என்று கேட்டார்.

"ஒன்று மில்லையே!"

"என்ன மாப்பிள்ளை, என்னைக் காது குத்துகிறீர்? எனக்குத் தெரியாது என்று நினைத்தீரா, என்ன? ஏதோ சாமான் எனக்கென்று கொண்டு வந்திருக்கிறீர். அதை ஒளித்து வைத்திருக்கிறீர். இல்லாவிட்டால் காலையிலிருந்து இப்படிக் கையை மூடிக் கொண்டிருப்பீரா?"

கையில் ஒன்றும் இல்லை என்று நான் என்ன சொல்லியும், மாமனார் கேட்கவில்லை. ஆகவே கடைசியில் கையைத் திறந்தே காண்பித்து விடுவது என்று தீர்மானித்துக் கையைத் திறந்தேன். பொத்தென்று மோதிரம் கீழே விழுந்தது.

"பார்த்தேளா? இத்தனை நாழி ஒன்றும் இல்லை என்று பொய்தானே சொன்னேள்? ஏது, எனக்கு நீங்கள் ஒரு மோதிரம் வாங்கிக் கொண்டு வந்திருக்காப்பலே இருக்கே! எதற்காக மாப்பிள்ளை எனக்கு மோதிரம்!" என்று சொல்லிக் கொண்டே மாமனார் அந்த மோதிரத்தைக் கையில் எடுத்துப் பார்த்தார்.

மோதிரத்தைக் கையில் எடுத்துப் பார்த்ததும், ஏமாற்றத்தால் மாமனாரின் முகம் சுருங்கியது. பொத்தென்று கீழே விழுந்த அந்த மோதிரம் தாம் அன்று எனக்குப் போட்டதுதான் என்று கண்டார். மோதிரம் என் கட்டை

விரலுக்கும் பெரியது என்றும், அது கீழே விழாமல் இருப்பதற்காகத்தான் நான் காலையிலிருந்து கையை அத்தனை இறுக மூடிக் கொண்டிருந்தேன் என்றும் உணர்ந்தார்.

"பரவாயில்லை மாப்பிள்ளை! மோதிரத்தைச் சின்னது பண்ணிக் கொடுக்கிறேன்" என்று மோதிரத்தை எடுத்து வைத்துக் கொண்டார்.

தீபாவளி கழிந்தது. நானும் ஊருக்குத் திரும்பினேன். ஊருக்குத் திரும்பி ஒரு மாத காலமும் ஆயிற்று. ஆனால் மோதிரம் சின்னது பண்ணி வரவில்லை.

ஆனால் என் தாயாருக்கோ பிள்ளை மொண்ணைக் கையாய் இருக்கிறானே என்று வருத்தம். அதற்காகச் சம்மந்தி அம்மாளுக்கு வரிந்து, வரிந்து கடிதம் போட்டுக் கொண்டே இருந்தாள். இதற்கு என் மாமனார் எனக்குப் பதில் போட்டுக் கொண்டே இருந்தார். என் மாமனார் போட்ட கடிதங்களிலிருந்து அவர் வீட்டுத் தட்டான் தட்டார வேலையைத் தவிர பாக்கி எல்லா வேலைகளையும் ஒழுங்காகச் செய்து கொண்டு இருப்பதாகப் பட்டது.

தீபாவளி கழிந்து இரண்டு மாதம் இருக்கும், ஒரு நாள் மாமனார் என் வீட்டுக்கு வந்தார். வந்ததும் வராததுமாக, "மாப்பிள்ளை! கையை நீட்டும்" என்றார்.

"ஏன் ஏதாவது ரேகை சாஸ்திரம் கற்றுக் கொண்டு வந்திருக்கிறீரா, என்ன?" என்று கேட்டேன்.

"கையை நீட்டுமே, சொல்கிறேன்" என்றார். கையை நீட்டினேன். கையில் ஒரு தங்க மோதிரத்தைப் போட்டார்.

மோதிரம் யாரோ குழந்தைக்குச் செய்யப் பட்டது போல் இருந்தது. "என்ன, உங்கள் கடைசி பையனுக்கு மோதிரம் வாங்கிக் கொண்டு வந்திருக்காப்பலே இருக்கே?" என்று கேட்டேன்.

"உமக்குத்தான் மாப்பிள்ளை, மோதிரம்! முந்திக் கொடுத்ததைச் சின்னது பண்ண முடியவில்லை. அதற்காக இதை வாங்கிக் கொண்டு வந்தேன்" என்றார்.

ஆனால் மோதிரம் என் சுண்டு விரலுக்குள் கூட நுழைய மறுக்கவே மோதிரத்தைப் பெரியது பண்ணிக் கொண்டு வருகிறேன் என்று புறப்பட்டார். ஆனால் அவர் தட்டான் விவகாரம்தான் தெரிந்தது ஆச்சே? ஆகவே இதைப் பெரியது பண்ண முடியவில்லை. அதற்குப் பதில் தங்க மோதிரம் தங்க முலாம் மோதிரமாக மாறியது. அப்படியாவது கைக்குச் சரியாக இருந்து தொலைந்ததா? கட்டை விரலுக்கும் பெரிதாய் இருந்தது.

"பரவாயில்லை, மாப்பிள்ளை! சின்னது பண்ணிக் கொண்டு வருகிறேன்" என்று மாமனார் திரும்பவும் புறப்பட்டார்.

மோதிரம் சின்னதாகி வராது, அதற்குப் பதில் தங்க முலாம் மோதிரம் வெள்ளி மோதிரமாக மாறும், அப்படி மாறினாலும் கைக்குச் சரியாக இருக்காது, சின்னதாக இருக்கும் என்று எனக்குத் தெரியாதா, என்ன?

"ஆமாம் வைர மோதிரம், போலி வைர மோதிரமாக மாறிற்று. போலி வைர மோதிரம் தங்க மோதிரமாக மாறிற்று. தங்க மோதிரம் தங்க முலாமாக மாறிற்று.

இப்பொழுது தங்க முலாம் என்னவாக மாறப் போகிறது?'' என்று கேட்டேன்.

ஆனால் மாமனார் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல வில்லை. அதற்குப் பதில் கோபித்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பி விட்டார்—மோதிரம் சகிதமாகத்தான்.

அந்தக் கோபத்தில் எனக்குக் கடிதம் போடுவதை நிறுத்தினார். வழக்கமாகத் தீவளிக்குத் தீவளி அனுப்பிக் கொண்டிருந்த புடவை, வேஷ்டியையும் நிறுத்தினார்.

இதனால் புடவையும், வேஷ்டியும் நஷ்டமாய் விட்டதே என்றுகூட எனக்கு வருத்தமில்லை. ஆனால் எங்கே மாமனார் ஞாபகம் மறந்து விடப் போகிறதோ என்று தான் வருத்தமாய் இருக்கிறது. ஏனெனில், முன்பு அவர் புடவையும், வேஷ்டியும் அனுப்பிக் கொண்டிருந்த காலத் தில் எனக்கு எப்பொழுதும் என் மாமனார் ஞாபகம் தான்!

“வேஷ்டி வாங்கிக் கொடுத்திருக்கிறாரே, முகரக் கட்டை யாட்டம்! புடவை வாங்கிக் கொடுத்திருக்கிறாரே, மூஞ்சி யாட்டம்” என்று வருஷ முழுவதும் அவர் பெயரையே ஸ்மரணை பண்ணிக் கொண்டிருப்பேன்.

இப்பொழுதும் ஒன்றும் கெட்டுப் போகவில்லை. தம் கோபத்தை மறந்து, வழக்கம்போல், அவர் புடவையும், வேஷ்டியும் அனுப்பினாரானால் நான் கட்டிக் கொள்ளத் தயார். வழக்கம் போலவே அவர் ‘ஞாபகமாகவும்’ இருக்கத் தயார்!

# தீக்ஷிதர் திட்டம்

தீக்ஷிதருக்கும், சர்மாவுக்கும் உள்ள அரசியல் அனுபவம் நம் நாட்டில் வேறு யாருக்காவது உண்டா என்பது சந்தேகந்தான். அரசியல் உலகிலே யார் எந்தத் துரும்பைத் தூக்கி எந்தப் பக்கம் போட்டாலும் சரி, அதைப் பற்றி உடனே இவர்கள் இரண்டு பேர் அபிப்பிராயமும் அறிக்கையாக வெளிவரா விட்டால் அந்தத் துரும்பு தூக்கிப் போடப்பட்டதாகவே அரசியல் விவகாரம் தெரிந்த யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

அதிலும் அறிக்கைகள் விடுவதில் இந்த இரண்டு பேருக்கு மிருந்த போட்டி சொல்லி முடியாது. தீக்ஷிதர் ஒரு முழ நீள அறிக்கை விட்டாரென்றால் உடனே சர்மா அதைப்பற்றி இரண்டு முழ நீள அறிக்கை விடுவார். இப்படியாக இரண்டு பேர் அறிக்கைகளும் அனுமார் வால் போல் நீண்டு கொண்டே போகும். ஒவ்வொரு சமயம் எந்த விஷயத்தைப் பற்றிச் சர்ச்சை ஆரம்பித்தது என்பது கூட மறந்து போகும். ஆனால் அறிக்கைகளோ என்றால் மாறி, மாறி வெளி வந்து கொண்டிருக்கும்.

ஒரு சமயம் தீக்ஷிதரும், சர்மாவும் சந்திக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. கல்யாண வயதில் தீக்ஷிதருக்கு ஒரு பையனும், சர்மாவுக்கு ஒரு பெண்ணும் இருந்ததுதான் இந்த நிலைமைக்குக் காரணம்.

சாதாரணமாக அரசியல் வாழ்க்கையில் அதிகமாக ஈடுபடாத நம் போன்றவர்களாயிருந்தால் என்ன பண்ணுவோம்? எல்லாரையும் வைத்துக் கொண்டு லௌகீக விஷயங்களைப் பற்றிப் பேசுவோம். ஒத்துப் போனால் உடனே கல்யாணத்துக்குத் தேதி நிச்சயம் பண்ணுவோம். இல்லாவிடில் மூட்டையைக் கட்டிக் கொண்டு ஊருக்குத் திரும்புவோம்.

ஆனால் தீக்ஷிதரும், சர்மாவும் நம் போன்ற சாதாரண மனிதர்கள்போல் நடப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா?

தீக்ஷிதர் வீட்டுக்காரர்கள் என்னமோ அப்படித்தான் எதிர்பார்த்து ஏமாந்து போனார்கள். தம் பிள்ளைக்கு இன்ன வரதக்ஷிணை வேண்டும் என்று தீக்ஷிதர் சர்மாவைக் கேட்பார், சர்மா அதற்கு ஒப்புக் கொள்வார், உடனே கல்யாணம் நிச்சயமாகிவிடும் என்று நினைத்தார்கள்.

உண்மையில் நடந்தது என்னவென்றால், தீக்ஷிதர் சர்மாவைப் பார்த்து, "இது விஷயமாக நான் ஒரு திட்டம் தயாரித்து வைத்திருக்கிறேன். அதற்குத் தீக்ஷிதர் திட்டம் என்று பெயர். தாங்கள் சம்மதப்படும் பட்சத்தில் நாம் இருவரும் அதை விவாதிக்கலாம்" என்றார்.

சர்மா, "ஆஹா! அதற்கென்ன? இப்படிக் கூடத்தி லேயே விவாதிக்கலாமா?" என்று கேட்டார்.

"ஊஹூம். கூடாது. காரியம் கெட்டு விடும். அதோ அந்தத் திண்ணை அறைதான் வசதியான இடம்! அங்கே போய்ப் பேசலாம்" என்றார் தீக்ஷிதர்.

அப்படியே இரண்டு பேரும் திண்ணை அறைக்குள் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு பேசத் தொடங்கினர். கூடத்தில் கூடியிருந்த பெண்டுகள் வெகு ஆவலாக என்ன முடிவு ஏற்படுகிறதோ என்று வெகு நேரம் காத்திருந்தனர்.

இரண்டு மணி நாற்பத்தாறு நிமிஷ காலத்துக்குப் பிறகு திண்ணை அறைக் கதவு திறந்தது. உள்ளேயிருந்து தீக்ஷிதரும், சர்மாவும் வெளியே வந்தனர். இரண்டு பேர் முகத்திலும் சந்தோஷக் குறிகள் தென்பட்டன.

கூடத்திலிருந்த எல்லாரும், என்ன தீர்மானம் ஆயிற்று என்று வெகு ஆவலாய் விசாரித்தார்கள். ஆனால் இரண்டு பேரும் பதில் சொல்ல மறுத்து விட்டனர். "நாளைக்கு இதே சமயம், இதே திண்ணை அறையில் நாங்கள் இருவரும் திரும்பவும் சந்தித்துப் பேசப் போகிறோம். அவ்வளவுதான் சொல்ல முடியும்" என்று பதில் கூறினர்.

அடுத்த நாள் குறிப்பிட்ட மணிக்கு, திண்ணை அறைப் பேச்சுக்கள் ஆரம்பம் ஆகின. ஆனால் அன்று கதவு கால் மணி நேரத்திலேயே திறந்து விட்டது. வெளியே வந்த தீக்ஷிதர் முகத்திலும், சர்மா முகத்திலும் முதல் நாள் காணப் பட்ட குஷி காணப்படவில்லை. விஷயம் என்னவென்று விசாரித்ததற்கு "இப்பொழுது ஒன்றும் சொல்வதற் கில்லை" என்று தீக்ஷிதர் கையை விரித்து விட்டார். சர்மாவோ ஏதோ ஒரு சமஸ்கிருத சுலோகத்தை ஒப்பித் தார். சுலோகத்தின் அர்த்தம் என்ன என்று சமஸ்கிருதம் தெரிந்தவர்களை விசாரித்ததில், "அவனன்றி ஓரணுவும் அசையாது" என்றார்கள்.

அதற்கடுத்த இரண்டு நாட்களும் சர்மாவும், தீக்ஷிதரும் ஒருவரை யொருவர் சந்திக்கவே யில்லை. இரண்டாம் நாள் மாத்திரம் சர்மாவிடமிருந்து தீக்ஷிதருக்கு சீல் வைத்த கடிதம் ஒன்று வந்து சேர்ந்தது. உடனேயே தீக்ஷிதரிட மிருந்து சர்மாவுக்கு ஒரு சீல் வைக்காத கடிதம் போய்ச் சேர்ந்தது.

மூன்றும் நாள் மாலை மூன்று மணி இருக்கும். தீக்ஷிதரின் கார் சர்மா வீட்டு வாசலில் வந்து நின்றது. உடனே அந்தக் காரில் ஏறி சர்மா தீக்ஷிதரின் வீட்டுத் திண்ணை அறைக்குப் போய்ச் சேர்ந்தார். மீண்டும் பேச்சுக்கள் தொடங்கின.

அன்று பேச்சு வெகு நேரம் நடந்தது. கடைசியில் கதவு திறந்து இரண்டு பேரும் வெளியே வந்ததும் என்ன தீர்மானமாயிற்று என்று கூடத்தில் இருந்த பெண்டுகள் விசாரித்தனர்.

"நாங்கள் இருவரும் தீக்ஷிதர் திட்டத்தை மூன்று மணி நாற்பத் தெட்டு நிமிஷம் விவாதித்தோம்" என்று தீக்ஷிதர் பதில் அளித்தார். சர்மாவை விசாரித்ததற்குக் "கொஞ்சம் பொறுங்களேன்; பொறுத்தார் பூமி யாள் வார் என்ற பழமொழியைக் கேட்டதில்லையா!" என்றார். அதாவது இதே அர்த்தம் கொண்ட சமஸ்கிருத சுலோகம் ஒன்றை ஒப்பித்தார்.

இதற்குப் பிறகு நான்கு நாட்கள் திண்ணை அறைப் பேச்சுக்கள் தொடர்ந்து நடந்தன. ஒரு நாளைக்குக் கால் மணி நேரத்துக்குள் கதவு திறந்துவிடும். சில நாளைக்கு, இரண்டு, மூன்று மணி நேரத்துக்குப் பிறகுதான் கதவு

திறக்கும். ஒருநாள் இரண்டு பேரும் சிரித்துக்கொண்டே வெளியே வருவார்கள். இன்னொருநாள் இரண்டு பேரும் ‘உம்’ மென்று முகத்தை வைத்துக் கொண்டு வெளியே வருவார்கள். ஒருவர் சிரித்துக்கொண்டு, இன்னொருவர் ‘உம்’ மென்று முகத்தை வைத்துக்கொண்டு வெளிவந்த நாட்களும் உண்டு.

ஒவ்வொரு நாளும் பேச்சு முடிந்த பத்து நிமிஷத்துக் கெல்லாம் தீக்ஷிதரிடமிருந்து சீல் வைத்த கடிதம் ஒன்று சர்மாவுக்குப் பறக்கும். அடுத்த பத்து நிமிஷத்துக்கெல் லாம் சீல் வைக்காத கவர் ஒன்று சர்மாவிடமிருந்து தீக்ஷிதருக்கு வரும்.

இதை யெல்லாம் வைத்துக்கொண்டு கூடத்தில் இருந்த பெண்டுகள், தினம் ஒரு ஹேஷ்யம் கூறுவார்கள்.

ஒரு நாள் “சர்மாவின் சிரித்த முகத்தைப் பார்த்தால் கல்யாணம் நடக்கும்போல் தோன்றுகிறது. ஆகவே, அப்பளத்துக்கு உளுந்து நனைக்க வேண்டியதுதான்” என்று உளுந்தை நனைப்பார்கள்.

அடுத்த நாளே, “இன்று திண்ணை அறைப் பேச்சுக் கள் கால் மணி நேரந்தான் நடந்ததைப் பார்க்கும்போது கல்யாணம் நடக்காது என்று தோன்றுகிறது. ஆகவே நனைத்த உளுந்தைத் திரும்பவும் உலரப் போடவேண்டியது தான்” என்று நனைத்த உளுந்தைத் திரும்ப உலரப் போடு வார்கள்.

இப்படியாகக் கூடத்தில் கூடியிருந்த பெண்களின் மனோ நிலை அலையிடை அகப்பட்ட துரும்பென ஊசலாடி யது. அப்பளத்துக்காக ஒதுக்கி வைக்கப்பட்ட உளுந்து

இன்று நினைக்கப்படுவதும், அடுத்த நாளே உலர்த்தப் படுவதுமாகத் திக்கு முக்காடித் திணறித் திண்டாடியது.

கடைசியில் ஒரு நாள் வந்தது. அன்று திண்ணை அறைக் கதவு திறக்கப்பட்டது. வழக்கத்துக்கு மாறாக, இரண்டு பேரும் பெண்டுகள் கூடியிருந்த கூடத்திற்கு வந்தனர்.

"தீக்ஷிதர் திட்டம் என்ன வாயிற்று என்று இப் பொழுது தெரிவிக்கக்கூடிய நிலையில் இருக்கிறோம். தீக்ஷிதர் திட்டம் முறிந்து விட்டது. அதற்குக் காரணம் நான்தான். இதோ அது சம்பந்தமான அறிக்கை" என்று ஒரு முழ நீள அறிக்கையைத் தீக்ஷிதர் நீட்டினார்.

"இல்லை, இல்லை, தீக்ஷிதர் திட்டம் முறிந்ததற்கு நான் தான் காரணம். அதைப்பற்றி இதோ என்னுடைய அறிக்கை" என்று இரண்டு முழ நீள அறிக்கை யொன் றைச் சர்மா நீட்டினார்.

அடுத்த நாளே தீக்ஷிதருக்கும், சர்மாவுக்கும் நடந்த கடிதப் போக்குவரத்து பத்திரிகைகளில் வெளியாயிற்று:—

## தீக்ஷிதர் கடிதம்

அன்புள்ள சர்மாவுக்கு,

வரதக்ஷிணை வாங்கக்கூடாது என்ற தீவிர கொள்கையுடையவன் நான் என்பது தாங்கள் அறிந்ததே. ஆகவே தாங்கள் வரதக்ஷிணையாகக் கொடுக்கப்போகும் பணத்தை யெல்லாம் சீர், செனத்திகளாகச் செய்ய வேண்டும் என்பது

தான் நான் சொல்லும் தீக்ஷிதர் திட்டம். இது விஷயமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் திட்டமாகத் தெரிவிக்கக் கோருகிறேன்,

தீக்ஷிதர்.

## சர்மாவின் பதில்

அன்புள்ள தீக்ஷிதருக்கு,

தங்கள் கடிதம் கிடைத்தது. வரதக்ஷணைப் பணத்தை யெல்லாம் பெண் பேருக்கு எழுதி வைக்க வேண்டும் என்ற கட்சியைச் சேர்ந்தவன் நான். தங்கள் திட்டத்துக்கும் என் கட்சிக்கும் ஒவ்வாது போல் தோன்றுகிறதே?

சர்மா.

## தீக்ஷிதர் கடிதம்

அன்புள்ள சர்மாவுக்கு,

தங்கள் கடிதம். தயவுசெய்து தங்கள் கட்சியைப் புனராலோசனை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தீக்ஷிதர்.

## சர்மாவின் பதில்

அன்புள்ள தீக்ஷிதருக்கு,

என் கட்சியைப் புனராலோசனை செய்வதற்கில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சர்மா.

மேற்படி கடிதங்கள் வெளியான இரண்டு நாளைக்கெல்லாம் பின்வரும் தீக்ஷிதர் - சர்மா கூட்டு அறிக்கை வெளியாயிற்று:—

## தீக்ஷிதர் - சர்மா கூட்டு அறிக்கை

திண்ணை அறைப் பேச்சுக்கள் முறிந்ததற்குப் பல பொய்க் காரணங்கள் கூறப்படுவதால் உண்மையை விளக்குவது எங்கள் கடமையாகிறது. அதற்காகத்தான் இந்தக் கூட்டு அறிக்கையை விடுத்துள்ளோம். திண்ணைப் பேச்சுக்கள் முறிந்ததற்கு முக்கிய காரணம் தீக்ஷிதர் திட்டமும், சர்மாவின் 'கட்சியும் ஒவ்வாததுதான். அப்படி ஒவ்வாமற் போனதின் காரணத்தைக் கண்டு பிடிப்பதற்காகக் கூடிய சீக்கிரத்தில் மறுபடியும் ஒரு திண்ணை மகாநாடு நடைபெறும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

தீக்ஷிதர், சர்மா.

# எஜமானர் வந்துவிட்டார்

"பாம்ப பாம்ப, பாம் பாம்! பாம்ப பாம்ப பாம் பாம்!"

எஜமானர் வரும் மோட்டார் வண்டியின் ஹார்ன் சத்தம் கேட்க வேண்டியதுதான் தாமதம், ஜெகப் புரட்டன் கம்பெனியின் குமாஸ்தாக்கள் எல்லாம் பள்ளிக் கூட உபாத்தியாயரைக் கண்டு ஓடி ஒளியும் பிள்ளைகளைப் போல (பழய காலத்துப் பிள்ளைகளைத்தான் சொல்கிறேன். இந்தக் காலத்தில் உபாத்தியாயர்கள் அல்லவா பிள்ளைகளைக் கண்டு ஓடி ஒளிய வேண்டியிருக்கிறது!) அவரவர்கள் இடத்தில் போய் உட்கார்ந்து கொள்வார்கள்.

எஜமானர் காரியாலயத்துக்குள் நுழையும்போதே ஏதோ பெரிய சூறுவளிக் காற்று மண்ணையும், புழுதியையும் கிளப்பிக்கொண்டு வருமே, அதைப்போலத்தான் வருவார். எப்படி, சூறுவளி முதலிய பெருங் காற்று வரப்போவதை முன் கூட்டியே தெரிந்து கொள்வதற்காகச் சாதனங்கள் இருக்கின்றனவோ, அதைப்போலவே தங்கள் எஜமானர் காரியாலயத்தை நோக்கி வந்து கொண்டிருப்பதையும் முன்கூட்டியே தெரிந்து கொள்வதற்கு ஜெகப் புரட்டன் கம்பெனி குமாஸ்தாக்கள் ஒரு சாதனம் கண்டு பிடித்து வைத்திருந்தனர்.

எஜமானரின் கார் டிரைவருக்கு எல்லாருமாகச் சேர்ந்து மாதம் பத்து ரூபாய் கொடுத்து வந்தனர். அதற்குப் பதிலாக, கார் டிரைவர், வண்டி காரியாலயத்துக்கு வர ஒரு பர்லாங் இருக்கும்போதே, "பாம்ப பாம்ப, பாம் பாம்! பாம்ப பாம்ப, பாம், பாம்!" என்று கார் ஹாரனை சத்தம் செய்வான். இந்தச் சங்கேத பாஷையின் மூலம் எஜமானர் வருவதை ஜெகப் புரட்டன் கம்பெனி குமாஸ்தாக்கள் தெரிந்து கொள்வார்கள்.

எஜமானர், உள்ளே நுழையும்போதே, வழியில் உள்ள கண்ணாடிக் கதவுக் கீல்களின் பலத்தைச் சோதித்துக் கொண்டு தான் நுழைவார். அவர் காரியாலயத்தை ஆரம்பித்த இந்த ஒரு வருஷத்துக்குள் பத்துப் பதினைந்து கதவுகளின் கீல்கள் "நாங்கள் தோற்று விட்டோம்" என்று அவர் முன் சரணாகதி அடைந்து விட்டன. கீல் போன பிறகும் உயிரை வைத்துக் கொண்டிருப்பதா என்று சொல்வதுபோல் அத்தனை கண்ணாடிக் கதவுகளும் கீழே விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டிருக்கின்றன. ஆனால் ஜெகப் புரட்டன் கம்பெனி எஜமானர் அதைப் பொருட்படுத்தினதாகத் தெரியவில்லை.

ஏனெனில் எவ்வளவுக் கெவ்வளவு கண்ணாடிக் கதவுகள் உடைபடுகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு தாம் கடுமையான மனிதர் என்று குமாஸ்தாக்கள் அறிந்து கொள்வார்கள், அவ்வளவுக் கவ்வளவு சம்பள உயர்வு விஷயமாகத் தம்மை அணுகுவதற்குப் பயப்படுவார்கள் என்பது எஜமானரின் எண்ணம்.

இதற்காக எஜமானர் இன்னும் அநேக பொருள்களின் பலத்தையும் சோதித்து வந்தார். அவர் அப்படிச்

சோதித்த பொருள்களில் முதன்மை ஸ்தானம் வகிக்கக் கூடியது அவர் தொண்டையாகும்.

தினம் காலையில் காரியாலயம் வந்ததும் கட்டிடமே இடிந்து விழும்படி "காஷியர்" என்றோ, "அக்கௌண் டன்ட்" என்றோ, தமக்கு யார் வேண்டுமோ அவர்களைப் பெயர் சொல்லிக் கூச்சலிடுவார்.

பார்க்கப் போனால் எஜமானர் தம் தொண்டைக்கு அத்தனை சிரமம் கொடுத்துக் கொள்ளவேண்டிய அவசியமே இல்லை. எல்லாக் காரியாலய எஜமானர்கள் மேஜையில் உள்ளதுபோல் அவர் மேஜையிலும் ஒரு மணி இருந்தது. மணி அடித்தால் சுருட்டி அடித்துக்கொண்டு, ஓடி வந்து ஏன் என்று கேட்க, மற்ற எல்லாக் காரியால யங்களில் உள்ளது போலவே இந்தக் காரியாலயத்திலும் எஜமானரின் அறைக்கு வெளியே, டவாலி, உடுப்பு முதலியன பூண்ட சேவகன் ஒருவன் தயாராகக் காத்துக் கொண்டிருந்தான்.

"இன்னாரை வரும்படி சொல்." என்று சேவகனிடம் சொன்னாலே போதும், உடனே வேண்டிய ஆசாமியை அழைத்து வர அவனுக்குத் தெரியும். இருந்தும் காலிங் பெல்லும், சேவகனும் செய்ய வேண்டிய வேலையை எஜமானரின் வலிய தொண்டை செய்து கொண்டு வந்தது.

"காஷியர், காஷியர், காஷியர், காஷியர்!" என்று எஜமானர் தொண்டைத் தண்ணீர் வற்ற நான்கு தடவைக் குக் குறையாமல் கத்திய பிறகுதான் காஷியர் ஆடி வழிந்து கொண்டே உள்ளே நுழைவார்.

தம்மை நான்கு தடவை கத்தும்படி விட்டதற்காக எஜமானர் காஷியரைக் கோபித்துக் கொள்ளமாட்டார். கூப்பிட்டதும் கூப்பிடாததுமாக வந்தால்தான் எஜமான ருக்குக் கோபம் வரும். ஆசாமி காரியாலயத்தில் வேறு ஒரு வேலையையும் கவனிக்கவில்லை போலிருக்கிறது, அது தான் கூப்பிட்டதும், உடனே காதில் விழுந்து விட்டது என்று நினைத்துக் கொண்டு விடுவார்.

இது விஷயம் தெரிந்துதான் ஜெகப் புரட்டன் கம்பெனி யில் யாரும் எஜமானர் கூப்பிட்ட உடனே போய்விட மாட்டார்கள். நான்கு தடவையாவது கத்தட்டும் என்று எத்தனை தடவை கூப்பிடுகிறார் என்று கணக்கிட்டுக் கொண்டிருப்பார்கள்.

சில காரியாலயங்களில் எஜமானரும், குமாஸ்தாக் களும் சந்தித்துக் கொள்ளும்போது ஒருவருக்கொருவர் பரஸ்பரம் "குட் மார்னிங்" என்றோ, "நமஸ்காரம்" என்றோ சொல்லிக் கொள்வது வழக்கம் அல்லவா? அதைப்போல்வே ஜெகப் புரட்டன் கம்பெனி எஜமானரும் வழக்கம் வைத்திருந்தார். ஆனால் இது விஷயத்தில் மற்றக் காரியாலய எஜமானர்களைப் பின்பற்றுமல் இவர் ஒரு புது வழியைக் கையாண்டார். நமஸ்காரம் என்றோ, குட்மார் னிங் என்றோ சொல்வதற்குப் பதில் "உமக்கு மூளை இருக் கிறதா?" என்று கேட்பார்.

சென்ற ஒரு வருஷ காலமாக எஜமானர் காஷியரைத் தினம் காலையில் இதைத்தான் கேட்டு வருகிறார். காஷியரும் பதிலுக்கு "உமக்கு மூளை இருக்கிறதா?" என்று எஜமான ரைத் தம் மனதுக்குள் கேட்டு வைக்கிறார்.

இதற்குப் பிறகு காரியாலய லெட்ஜர் நோட்டுப் புத்தகங்களின் பைண்டு உறுதியாக இருக்கிறதா என்ற பரீட்சை நடக்கும்.

மேஜை மேல் காஷியர் விரித்து வைக்கும் லெட்ஜர் களில் உள்ள கணக்குகளை எஜமானர் கூட்டிப் பார்ப்பார். கணக்குத் தப்பாக இருக்கும். உடனே கட்டிடம் அதிரும் படி "ஹா, ஹா, ஹூ, ஹூ" என்று இரைந்துகொண்டு லெட்ஜர்களைத் தூக்கி எறிவார். எந்தக் கெட்டிக்கார பைண்டர் அந்த நோட்டுப் புத்தகங்களை பைண்டு பண்ணினுலே, எஜமானர் இந்த ஒரு வருஷ காலத்துக்குள் அதன் உறுதியை 365 தடவை பரீட்சை செய்தும், அது ஸ்டாலின் கிராட் கோட்டையைப்போல் கட்டிடம் குலையாமல் எதிர்த்து நிற்கிறது.

இந்த வழக்கத்தை எஜமானர் எங்கிருந்து கற்றுக் கொண்டார் என்று சிப்பந்திகள் எல்லாருக்கும் ஆச்சரியம். எஜமானர் பள்ளிக்கூடப் பையனுக இருந்த காலத்தில் அவர் கணக்கு நோட்டுப் புத்தகங்களைத் தினம் கணக்கு வாத்தியார் தூக்கி எறிந்திருக்கிருர். அந்த ஆத்திரத்தை யெல்லாம் வைத்துக்கொண்டுதான் எஜமானர் இப்பொழுது தம் சிப்பந்திகளின் கணக்கு நோட்டுப் புத்தகங்களைத் தூக்கி எறிகிருர்! ஆனுல் ஒரு வித்தியாசம். பள்ளிக் கூடத்தில் தூக்கி எறியப்படும் கணக்குப் புத்தகங்களில் கணக்குகள் திரும்பவும் சரி பார்க்கப்படும். ஆனுல் இந்த லெட்ஜர் கணக்குகள் திரும்பவும் சரி பார்க்கப்பட மாட்டா! சரியான கணக்குகளை எஜமானர் தப்பு என்று சொன்னுர் என்பதற்காக மாற்ற முடியுமா?

ஆனால் பாவம், எஜமானர் மீது குற்றம் சொல்லியும் பிரயோசனம் இல்லை. அவர் கூட்டிப் பார்க்கும் ஒவ்வொரு தடவையும் ஒரு புது விடை வருமே யொழியச் சிப்பந்திகள் கண்டுபிடித்து எழுதி வைத்திருக்கும் விடை வராது.

............அதோ. லெட்ஜர் நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. இனியும் இங்கிருந்தால் ஆபத்துத் தான்!

# தேசம் பிழைத்தது!

ஒரு நாள் காலை பதினேறு மணி இருக்கும். டில்லி வைஸராய் மாளிகையில் வைஸராய் லின்லித்கோ பிரபு, ஒரு ஹாலில், ஒரு பக்கமாகப் போடப்பட்டிருந்த சோபாவில் சாய்ந்துகொண்டு ஏதோ படித்துக்கொண் டிருந்தார். அவருக்குப் பின்புறத்தில் உள்ள சுவரில், அவர் தலைக்கு மேலே, பின்வரும் விளம்பரம் காணப் பட்டது.

> "இதனல் மாட்சிமை மிக்க மன்னர் சர்க்கார் இந்திய மக்களுக்குத் தெரிவிப்பது யாதெனில், நாட்டின் சமூகத் தலைவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து தேசிய மந்திரி சபை அமைக்க முன் வரும் பட்சத்தில் அரசாங்கத்தை அவர்கள் கையில் ஒப்படைக்க எங்களுக்கு யாதொரு தடையுமில்லை."

அப்பொழுது வைஸராயின் அந்தரங்கக் காரியதரிசி உள்ளே நுழைந்தார்.

"ஐந்து பேர் தங்கள் தரிசனத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

"யார் அவர்கள்?"

"நாட்டின் பிரதிநிதிகளாம். தேசீய மந்திரி சபை அமைப்பதற்காக வந்திருக்கிறார்களாம்."

"இதுவரை அவர்கள் எத்தனையோ தடவை வந்தாகி விட்டது. ஒவ்வொரு தடவையும் எனக்கும் மன்னர் சர்க்காருக்கும் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொடுத்து விட்டுப் போயாகிவிட்டது. இப்பொழுது திரும்பவும் எதற்காக வந்து என் கழுத்தை அறுக்கிறார்கள் ?"

"இல்லை. இந்தத் தடவை அவர்கள் எல்லாரும் ஒத்துப் போய்விட்டார்களாம். எல்லாருமாகச் சேர்ந்து தேசிய மந்திரி சபை அமைக்கப் போகிறார்களாம்."

இந்த வார்த்தையைக் கேட்டதும் வைஸராய் துள்ளிக் குதித்தார்.

"எப்படா இவர்கள் வந்து என் தலைமேல் சுமத்தப் பட்டுள்ள பாரத்தைத் தாங்கள் மேற் கொள்வார்கள் என்று காத்துக் கொண்டிருந்தேன்.. நல்ல வேளையாக வந்தார்களா ! உடனே வரச் சொல்லும், உடனே வரச் சொல்லும்" என்று கூறினார்.

காரியதரிசி வெளியே போனதும் ஐந்து பேர் உள்ளே நுழைந்தார்கள்.

இவர்கள் எல்லாரும் வைஸராயைப் பார்த்துக் கொண்டே நுழைந்ததால் அவர்கள் முதுகுப்புறம் மாத்திரம் எனக்குத் தெரிந்ததே யொழிய அவர்கள் முகம் தெரியவில்லை. ஆனால் இவர்கள் தங்கள் தலையில் தரித் திருந்த குல்லா, தலைப்பாகை, தொப்பி முதலியவற்றிலிருந்து ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், பார்ஸிகள், சீக்கியர் ஆகிய வகுப்பாரின் பிரதிநிதிகள் வந்துள்ளனர் என்று தெரிந்து கொண்டேன்.

இவர்களைக் கண்டதும் வைஸ்ராய்க்கே ஆச்சரியமாக இருந்தது. ஏன் ஆச்சரியமாக இருக்காது? இந்தியர்கள் ஒருக்காலும் ஒன்று சேரமாட்டார்கள், ஆகவே இந்தியா பிரிட்டிஷாரின் கையை விட்டுப் போகாது என்றுதானே வைஸ்ராய் இதுவரை நினைத்து வந்திருப்பார்?

வைஸ்ராய் ஆச்சரியப்படுவதைக் கண்டதும் அந்த ஐந்து பேரும் சற்று திடுக்கிட்டார்கள். கடைசியில் தலைப் பாகை தரித்திருந்த ஆசாமி ஒரு அடி முன்சென்று, சுவரில் ஒட்டப்பட்டிருந்த விளம்பரத்தை வைஸ்ராய்க்குச் சுட்டிக் காட்டினார்.

"அதன்படி நடப்பதாக உத்தேசம் தானே!" என்று கேட்டார்.

"ஆஹா, சந்தேகமின்றி! பிரிட்டிஷார் தங்கள் வாக்குறுதியை என்றும் காப்பாற்றத் தவற மாட்டார்கள் என்பது உலகம் அறிந்த விஷயமாயிற்றே!"

"அப்படியானால் நாட்டை எங்கள் கையில் ஒப்படையும்."

"உங்களுக்குள் அபிப்பிராய பேதம் ஒன்றும் கிடையாதே? நீங்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து, உங்களுக் கிடையில் சண்டையின்றி நாட்டை ஆள்வீர்கள் என்று நான் நம்பலாமா?" என்று வைஸ்ராய் கேட்டார்.

அதற்குத் தலைப்பாகை தரித்திருந்த ஆசாமி, "பிரபுவே! தங்களுக்கு ஏன் இந்த சந்தேகம்? நாங்கள் இனிமேல் சண்டை போட்டுக் கொள்ள மாட்டோம். நாங்கள் எல்லாரும் ஒத்துப் போய்விட்டோம். எங்கள் எல்லாருக்கும் இனிமேல் ஒரே லட்சியம்தான். ஒரே

மண்ணில் பிறந்து ஒரே மண்ணில் மறையப்போகும் நாங்கள் இனிமேல் சண்டையின்றிச் சகோதரர்கள்போல் வாழ்வோம்" என்று மிக உருக்கமாகச் சொன்னார்.

மற்ற நான்கு பேரும் இதை ஆமோதிப்பவர்கள் போல், "ஆமாம், பிரபுவே! ஆமாம்" என்று தலையை யாட்டினார்கள்.

"அப்படியானால் உட்காருங்கள். உங்கள் கட்சிகளுக்கு நாட்டில் எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது என்பதை எடுத்துக் கூறுங்கள்" என்றார் வைஸராய்.

உடனே அந்த ஐந்து பேரும் தங்களுடன் தயாராகக் கொண்டு வந்திருந்த தஸ்தாவேஜுகளை வைஸராய் கையில் கொடுத்தனர். வைஸராய் அவற்றை வாசித்துப் பார்த்தார்.

வைஸராயின் முகம் மலர்ந்தது. "மிகவும் சரி. அரசாங்கத்தை உங்கள் கையில் ஒப்படைக்க எனக்கு யாதொரு தடையுமில்லை. நீங்கள் உடனேயே மந்திரி சபை அமைத்துக் கொள்ளலாம். இனிமேலாவது இந்தியர்கள் என்னைக் குறை கூற மாட்டார்கள் என்று நம்புகிறேன். இன்னொரு விஷயம். உங்கள் காரியங்களில் நானோ, என் சிப்பந்திகளோ குறுக்கிடமாட்டோம் என்றும் அந்த அட்லாண்டிக் சமுத்திரம் சாட்சியாக உறுதிகூறுகிறேன்" என்றார்.

பிறகு வைஸராய் அந்த ஐந்து பேருடனும் கை குலுக்கினார். தமக்கு இருந்த சந்தோஷத்தில் வைஸ்ராய் அவர்கள் கைகளை குலுக்கு, குலுக்கு என்று குலுக்கி விட்டார். பாவம், அவர்கள் கைகள் சுளுக்கிக் கொண்டு விட்டன!

கைகளை உதறிக் கொண்டே அவர்கள் தங்கள் ஆசனங்களி லிருந்து எழுந்து என் பக்கம் திரும்பினர்.

அவர்களைக் கண்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! "அட பாவிகளா! நீங்களா இந்தியாவின் முதல் தேசீய மந்திரி சபையை அமைக்கப்போகிறீர்கள்?" என்று கதறினேன். அவர்கள் என்னைப் பார்த்து நகைத் துக் கொண்டு வெளியே சென்றார்கள்.

நீங்களும் நானும் எதிர்பார்த்ததுபோல் அவர்கள் இந்திய சமூகங்களின் தலைவர்கள் அல்ல. அவர்கள் ஸ்ரீமான்கள் காலரா, மலேரியா, பஞ்சம், வகுப்புக் கலகம், யுத்த பீதி ஆகியவர்கள்தான். ஒவ்வொருவரின் பெயரும் அவரவர்கள் மார்பில் பொறிக்கப்பட்டிருந்தது!

நான் உடனே அலறி யடித்துக்கொண்டு வைஸரா யண்டை சென்றேன். "வைஸராய் பிரபுவே! மோசம் போய் விட்டீர்கள்! மோசம் போய்விட்டீர்கள்! இவர்கள் யாரென்று தெரிந்து கொள்ளாமல் இவர்கள் கையில் அரசாங்கத்தை ஒப்படைத்து விட்டீர்களே! குல்லாவும், தலைப்பாகையும், தொப்பியும் போட்டுக்கொண்டு வந்து அவர்கள் தங்களை ஏமாற்றிவிட்டுச் சென்று விட்டார் களே!" என்று கதறினேன்.

வைஸராய் என்னைப் பார்த்து ஒரு புன்னகை புரிந்தார். "நான் அவர்கள் யாரென்று தெரிந்துகொள்ளாமல் அரசாங்கத்தைக் கொடுத்து விடவில்லை. இதோ பாரும். சுவரில் ஒட்டப்பட்டிருக்கும் விளம்பரம். அதன்படிதான் நடந்தேன்" என்றார்.

"தாங்கள் கூறுவது ஆச்சரியமாக இருக்கிறதே! நாட்டின் சமூகத் தலைவர்களா இவர்கள்?"

"ஆம். அவர்கள் என்னிடம் கொடுத்த தஸ்தாவேஜு களி லிருந்தும், தினம் பத்திரிகைகளில் வரும் செய்திகளி லிருந்தும் தற்சமயம், இந்தியாவில் இவர்கள் கட்சிகள் தான் வலுப்பெற்று இருப்பதாகத் தெரிகிறது. இவர்கள் நாட்டின் பிரதிநிதிகள் அல்லவென்று நான் எப்படி மறுத்துக் கூற முடியும்?"

"அப்படியானால் இனிமேல் என்றென்றைக்கும் இவர்கள் தாண்டவம் தானா?"

"நான் என்ன பண்ணலாம்? உங்கள் தலைவர்கள் எல்லாரும் ஒன்றுபட்டு இந்தப் புது மந்திரிகளைத் துரத்தி விட்டுத் தாங்கள் அரசாங்கத்தை ஒப்புக்கொள்ள முன் வராத வரையில் இவர்கள் ஆட்சிதான் நடக்கும் என்று தோன்றுகிறது" என்றார்.

அப்பொழுது கதவைத் திறந்துகொண்டு ஸ்ரீமான் காலரா உள்ளே நுழைந்தார். "என்ன மிஸ்டர்! இனி மேல் ஏதாவது சொல்ல வேண்டி யிருந்தால் என்னிடம் சொல்ல வேண்டும், தெரிந்ததா? வைஸ்ராயிடம் அல்ல" என்று என்னைப் பார்த்து ஒரு முழி முழித்தார். நான் நடுங்கிப் போய் "ஹா!" என்று கதறி விழித்துக் கொண்டேன்.

* * *

"என்ன இது! காப்பியைக் கையில் வைத்துக் கொண்டு தூங்குகிறீர்களே! இந்தாருங்கள் பேப்பர்"

என்று அப்பொழுதுதான் வந்த தினசரிப் பத்திரிகையைக் கொடுத்தாள் என் மனைவி. பத்திரிகையைப் பிரித்ததும், முதல் பக்கத்தில் போட்டிருந்த செய்தியைப் பார்த்து விட்டுத் துள்ளிக் குதித்தேன். "தேசம் பிழைத்தது!" என்று கூவினேன். ஏனெனில் ஜெனரல் வேவல் புது வைஸராயாக வரப் போகிறார் என்று கண்டிருந்தது! ராணுவ வைஸராயாகிய ஜெனரல் வேவல், சமூகத் தலைவர்கள் ஆகட்டும், வேறு யார் ஆகட்டும், யார் ஒன்று சேர்ந்து வந்து கேட்டாலும், அவர்களிடம் சர்க்காரை ஒப்புவித்துவிட மாட்டாரல்லவா?

# மாப்பிள்ளைகளே, உஷார்!

[கல்யாணமாகாதவர்கள் கவனித்து வாசிக்க!]

தன்னைப்பற்றி நான் ஒரு கட்டுரை எழுதவேண்டும் என்பதற்காக என் நண்பர் ஒருவர் வெகு காலமாக என்னென்னமோ யுக்திகள் கையாண்டு வருகிறார்.

"என்ன ஸார்! எங்கெங்கோ மடையனைப் பற்றியோ கட்டுரைகள் எழுதுகிறீர்களே, நம்மைப்பற்றி ஒன்று எழுதக் கூடாதா?" என்று வாய் விட்டே கேட்பார் ஒரு சமயம்.

"டேய்! அவரிடம் ஏதாவது வாய் கொடுத்து வைக்காதே, அடுத்த வாரமே நம் இருவரைப் பற்றியும் கட்டுரை எழுதிச் சந்தி சிரிக்க வைத்து விடுவார்" என்று தந்திரமாகத் தன் நண்பரிடம் சொல்லிப் பார்ப்பார் இன்னொரு சமயம்.

"சார்! நான் இப்பொழுதே சொல்லி விட்டேன். அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரை அம்பலத்துக்கு இழுத்ததுபோல் என்னையும் இழுத்தீர்களோ எனக்குக் கெட்ட கோபம் வந்து விடும்" என்று பயமுறுத்திப் பார்ப்பார் மற்றொரு சமயம்.

அவர் உருட்டலையும் மிரட்டலையும் கண்டு நான் இதுவரை மசியவில்லை. இதுவரை அவரைப் பற்றிக் கட்டுரையும் எழுதவில்லை.

இன்றோ, அவரைப் பற்றிக் கட்டாயம் எழுதித்தான் ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தமான நிலைமை ஏற்பட்டு விட்டது. நண்பன் என்ற முறையில் இந்த ஆபத்துச் சமயத்தில் கூட அவருக்கு நான் உதவாவிட்டால் உலகம் என்னை நிந்திக்காதா? நீங்களே சொல்லுங்கள்!

பத்து வருஷங்களுக்கு முன்னர் நான் சொன்னதைக் கேட்டிருந்தால் அவருக்கு இத்தகைய ஆபத்து ஏற்பட்டிருக்காது. அந்தக் காலத்தில் அவருடைய பெற்றோர்கள், எத்தனையோ பெண் வீட்டுக்கு அவரைக் கூட்டிக்கொண்டு போனார்கள். படித்த பெண்கள், படிக்காத பெண்கள், நாட்டுப் பெண்கள், நகரத்துப் பெண்கள், சிவப்புப் பெண்கள், கறுப்புப் பெண்கள், பெரிய பெண்கள், சிறிய பெண்கள் ஆகிய எத்தனையோ விதப் பெண்களைக் காண்பித்தார்கள். ஆனால் அசட்டு மனுஷன் அவர்களில் ஒருவரையும் வேண்டாம் என்று சொல்லிவிட்டார்! பாவம், அத்தனை பெண் வீட்டுக்காரர்களுக்கும் பிள்ளை வீட்டாருக்காக ரயில் சத்தமும், காப்பி, டிபன் செலவும் செலவழிந்ததுதான் மிச்சம்!

இத்தனை பெண்களையும் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளிவிட்ட நண்பர் குடு குடு என்று ஓடிப்போய், யாரையும், கேட்காமல், கொள்ளாமல், ஒரு படித்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டார்! ஒரு மனுஷனுக்கு இதைவிடப் பேராபத்து வேறு என்ன வேண்டும், கேட்கின்றேன்.

நண்பரைக் குற்றம் சொல்லியும் பிரயோசனமில்லை. கொஞ்ச நாளைக்கு முன்பாவது படித்த பெண்கள், படிக்

காத பெண்கள் என்று இரண்டு கோஷ்டியினர் இருந்தனர். படித்த பெண்களைக் கண்டு பயப்பட்டவர்கள் படிக்காத பெண்களைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம் என்ற சௌகரியம் இருந்தது. இப்பொழுது இந்தச் சௌகரியமும் போய்விட்டது. 'படிக்காத பெண்கள்' என்ற இனமே, பாவம், கவனிப்பாரற்றுப் பூண்டோடு அழிந்து விட்டது.

எங்கு பார்த்தாலும் படித்த பெண்கள் தான் தோற்றமளிக்கிறார்கள். யார் வீட்டுக் கதவைத் தட்டினாலும் படித்த பெண்கள் தான் கதவைத் திறக்கிறார்கள். டிராமில் ஏறப்போனால் படித்த பெண்கள்தான் நம்மை முந்திக் கொண்டு ஏறுகிறார்கள். பஸ்களில் ஏறினால் படித்த பெண்கள்தான் நம்மிடத்தைப் பிடுங்கிக் கொள்கிறார்கள். ஆக, படித்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயாராக இல்லாதவர்கள் தங்கள் வாழ்நாளைப் பிரம்மச்சாரியாகவே கழிக்க வேண்டியதுதான்.

ஆகவே, சமீபத்தில் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்களுக்கும், இனிமேல் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறவர்களுக்கும், படித்த பெண்ணுடன் குடித்தனம் நடத்தும் விதம் தெரிந்திருக்க வேண்டியது மிகவும் அவசியம் அல்லவா?

என்னுடைய அனுபவத்தைக் கொண்டு, சமீபத்தில் கல்யாணம் ஆன மாப்பிள்ளைகளுக்கு நான் சொல்லக் கூடிய உபதேசம் என்னவென்றால், "மாப்பிள்ளைகளே, உஷார்!" என்பதே.

ஆம், மாப்பிள்ளைகளே உஷார்! படித்த பெண்களுடன் குடித்தனம் பண்ணுவதே ஒரு தனிக் கலை. பழைய காலத்தில் நம் பெற்றோர்கள் குடித்தனம் பண்ணினார்களே அதைப் போலத்தானே என்று நினைத்தீர்களோ, வந்தது மோசம்!

பழைய காலத்தில், அதாவது படிக்காத பெண்களே குடும்பம் நடத்திவந்த காலத்தில், புருஷன் மனம் கோணாமல் நடப்பதே மனைவியின் கடமையாக இருந்தது. படித்த பெண்களுடன் குடித்தனம் நடத்த விரும்புகிற வர்கள் இதே பாடத்தைத் திருப்பிப் படித்தால்தான் அதாவது மனைவியின் மனம் கோணாமல் நடக்கத் தெரிந்து கொண்டால்தான் நிம்மதியாக இல்லற வாழ்க்கை நடத்தலாம்.

படித்த பெண்களுக்குச் சமையல் விஷயமாக ஒன்றும் தெரியாது என்ற அவதூறு வெகுவாக வழங்கி வருகிறது. இதைப்போல அபத்தம் வேறு ஒன்றும் கிடையாது. நான் சென்ற சில வருஷங்களாகச் சரசுவுடன் குடித்தனம் நடத்தி வருகிறேன். உலகில் என்னென்ன சமையல் உண்டோ, அத்தனை வித சமையல்களைப் பற்றியும் சரசு வுக்குத் தெரியும். ஒவ்வொரு கறி காயையும் என்னென்ன புது வழிகளில் பதார்த்தம் பண்ணலாம் என்பதும் அவளுக்குத் தெரியும். சமையல் விஷயமாகப் பத்திரிகை களில் வரும் குறிப்புகள் அத்தனையையும் அவள் சேர்த்து வைத்திருக்கிறாள்.

வழக்கமாக நம் தாயார்கள் சமைத்துப் போட்டுச் சாப்பிட்டிருக்கும் சாப்பாட்டுக்கும், சரசு போன்ற படித்த பெண்கள் சமைத்துப் போடும் சாப்பாட்டுக்கும்

சற்று வித்தியாசம் இருக்கத்தான் செய்யும். வித்தியாசத்துக்குக் காரணம் படித்த பெண்கள் சமையலில் வைடமின்கள் கெடாமல் அப்படியே இருக்கும். வைடமின்கள் கெடாமல் அப்படியே இருக்க வேண்டுமானல், பதார்த்தங்கள் அதிகமாக வேகக்கூடாது என்று நான் சொல்ல வேண்டியதில்லை. வைடமினுடன் பதார்த்தங்களை உட்கொள்ளத் தெரியாதவர்கள் தயவு செய்து கல்யாணம் வேண்டாம் என்று இருந்து விடுங்கள். உங்களுக்கும் க்ஷேமம், படித்த பெண்களுக்கும் க்ஷேமம்.

படித்த பெண்களைக் கல்யாணம் பண்ணிக் கொண்டிருக்கும் மாப்பிள்ளைகள் அடுத்த படியாகத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம், பொதுவாக அன்னிய ஸ்திரீகளுடன் எப்படிப் பழகுவது என்பது.

பழைய கால மாப்பிள்ளைகளுக்கோ என்ருல் இத்தகைய ஆபத்து கிடையவே கிடையாது. அவர்கள் மனைவிமார்களைத் தேடிக்கொண்டு ஒருவரும் வரமாட்டார்கள். அப்படி வந்தாலும் புருஷர்களைக் கண்டதும் தலையைக் குனிந்து கொண்டு போய்விடுவார்கள்.

படித்த பெண்மணிகளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டிருக்கும் மாப்பிள்ளைகளே, உஷார்! உங்கள் மனைவியைத் தேடிக் கொண்டு தினம் பத்து படித்த பெண்களாவது உங்கள் வீட்டுக்கு வருவார்கள். அவர்கள் தலை குனிய மாட்டார்கள் என்பது மட்டும் அல்ல, தங்களைக் கண்டு நாம் தலை குனிந்தாலும் ஏளனமாக நினைப்பார்கள். நாமும் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அவர்களுடன் பழகவேண்டும். அப்படிப் பழகும்போது, ரொம்ப

அலட்சியமாகவும் பழகிவிடக்கூடாது, கெக்கே, பிக்கே என்றும் பழகக் கூடாது. ஊசி முனையில் நடப்பதுபோல் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

இது விஷயம் மிகவும் கஷ்டம்தான். சரசுவைத் தேடி வரும் படித்த பெண்களால் எனக்கும், சரசுவுக்கும் எத்தனையோ தடவை சண்டை உண்டாகி யிருக்கிறது. ஒரு பெண்ணுடன் அதிகம் பேசிவிட்டேன் என்பாள், ஒரு பெண்ணுடன் சரியாகப் பேசாமல் விட்டுவிட்டேன் என்பாள்.

இந்தத் தொல்லை யெல்லாம் வேண்டாம் என்றுதான் பழைய காலத்தில் புருஷர்களும் ஸ்திரீகளும் அதிகமாகப் பழகக் கூடாது என்று வைத்திருந்தார்கள். இதை இந்தப் படித்த பெண்கள் கேட்டால்தானே?

கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது பழைய காலப் பழமொழி. பழைய காலத்து ஸ்திரீகளுக்கு என்றே ஏற்பட்ட பழமொழி என்று சொன்னாலும் மிகையாகாது. பழையகாலத்து ஸ்திரீகள் ஒருவரை யொருவர் சந்தித்துக் கொள்வதற்காகக் கோயிலுக்குப் போவது என்று வைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால், படித்த பெண்கள் ஒரு புதுமொழியைக் கையாளுகிறார்கள். "தையற்காரன் இல்லா ஊரில் தங்கி இருக்கவேண்டாம்" என்பதுதான் அது.

மாப்பிள்ளைகளே! உத்தியோக மாற்றலாக நீங்கள் எந்த ஊருக்குச் செல்ல வேண்டி யிருந்தாலும் சரி, அந்த ஊரில் நல்ல தையற்காரன் இருக்கிறானா என்று கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். அந்தத் தையற்காரனுக்கும்

தினம் ஒரு புது மோஸ்தரில் ஜாக்கெட் தைக்கத் தெரியுமா என்பதையும் விசாரித்து வைத்துக் கொள்ளுங்கள்.

தையற்காரன் கடை இருக்கும் இடத்தைத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். நீங்கள் காரியாலயத்திலிருந்து திரும்பி வரும்போது, வீடு பூட்டப்பட்டிருந்தால், மனைவியைக் கண்டு பிடித்து வீட்டுச் சாவியை வாங்கிக்கொண்டு வருவதற்காகத்தான்.

படித்த பெண்கள் புடவைகள் வாங்கும் விஷயத்தைப் பற்றி ரொம்ப பேருக்குத் தப்பபிப்பிராயம் இருக்கிறது. படித்த பெண்கள் ஏகத்தாராகப் புடவையில் பணத்தைக் கொட்டிக் கொண்டிருப்பார்கள் என்றும், அதற்குப் புருஷர்கள் உடந்தையாக இருக்க வேண்டும் என்றும் பலர் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். இதைப்போல அபத்த மான அபிப்பிராயம் வேறு ஒன்றும் கிடையாது.

படித்த பெண்களின் புடவையின் விலை ஒரு காலத் திலும் பத்து ரூபாய்க்குமேல் போகாது. பழைய காலத் துப் பெண்கள் நூறு, இருநூறு போட்டுப் புடவை வாங்கிப் பெட்டியில் வைப்பதற்குப் பதில், இவர்கள் பத்து பத்து ரூபாயாக இருபது புடவைகள் வாங்கிப் பீரோவில் அடுக்கி வைப்பார்கள். ஆக, புடவைச் செலவு இரண்டு பேர் விஷயத்திலும் ஒன்றுதான். ஆனால் ஒன்று, படித்த பெண்கள் ஒரு புடவை வாங்குவதற்கு ஒன்பது கடைக்குப் போவார்களாதலால் புடவை வாங்குவதற்கு ஏற்படும் வண்டிச் சத்தம் புடவையின் விலையைவிட அதிகமாகி விடும். இன்னும்.....................

இத்துடன் கட்டுரை முடிவதை நேயர்கள் மன்னிக்க! மீதிக் கட்டுரை ஸ்ரீமதி அனுவின் கையில் அகப்பட்டுச் சுக்கு நூறாகி விட்டது!

# அடுத்த யுத்தம்

லண்டன்மா நகரத்தில் பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபை கூடிற்று. பார்லிமெண்டு அங்கத்தினர் காரென் ஸென் எழுந்து பிரதம மந்திரியைப் பின்வரும் கேள்வி கேட்டார்.

"சமீபத்தில் லண்டன்மா நகரத்தில் நடந்த எதிரி விமானத் தாக்குதல்களினால் எத்தனை கோழிக் குஞ்சுகளுக் குக் கால் அடி பட்டது என்று சபையில் தெரிவிக்க முடியுமா?

பிரதம மந்திரி:—முடியாது.

அங்கத்தினர்:—ஏன்?

பிரதம மந்திரி:—எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும்.

*　　　*　　　*

இன்னொரு நாள் அதே லண்டன் மாநகரத்தில், அதே பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபை கூடுகிறது. அதே அங்கத் தினர் காரென்ஸென் எழுந்து நிற்கிறார். பிரதம மந்திரி யைப் பார்த்துப் பின்வரும் கேள்வியைக் கேட்கிறார்.

"சமீபத்தில் இருட்டடைப்பின்போது எத்தனை பேர் தங்கள் ஜேபியென்று நினைத்துக் கொண்டு பிறர் ஜேபியில் கை விட்டனர் என்று தெரிவிக்க முடியுமா?

பிரதம மந்திரி :—முடியாது.

அங்கத்தினர் :—ஏன்?

பிரதம மந்திரி :—எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும்.

* * *

மற்ருெரு நாள் அதே லண்டன்மாநகரத்தில், அதே பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபை கூடுகிறது. அதே அங்கத்தினர் காரென்ஸென் எழுந்து நிற்கிருர். பிரதம மந்திரியைப் பார்த்துப் பின்வரும் கேள்வியைக் கேட்கிருர்.

"யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து இதுவரை பிரதம மந்திரி சர்ச்சில் எத்தனை சுருட்டுகள் குடித்திருப்பார் என்று புள்ளி விவரம் தெரிவிக்க முடியுமா?"

பிரதம மந்திரி :—முடியாது.

அங்கத்தினர் :—ஏன்?

பிரதம மந்திரி :—எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும்.

* * *

யுத்தம் ஆரம்பித்ததிலிருந்து இதுவரை எத்தனையோ தடவைகள் பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபை கூடியாகி விட்டது. காரென்ஸெனும் ஒவ்வொரு தடவையும், "இதைத் தெரிவிக்க முடியுமா?" "அதைத் தெரிவிக்க முடியுமா?" என்று பிரதம மந்திரியைக் கேட்டாகி விட்டது. ஆனல் பிரதம மந்திரி ஏதாவது பதில் சொன்ஞரோ? இல்லை. ஏனெனில் எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும்!

பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபையில் மட்டும்தான் இப்படி நடக்கிறது என்று நினைக்காதீர்கள். உலகெங்கணும் உள்ள எல்லா ஜனநாயக சபைகளிலும் இப்படித்தான் நடக்கிறது. ஏன், நம் இந்திய சட்டசபையில்கூட அப்படித்தான் நடக்கிறது. ஆனால், நம் ஊர் சட்ட சபையில் ஒரு வேடிக்கை என்னவென்றால், யாராவது ஒரு அங்கத்தினர் சற்று கசப்பான கேள்வியைக் கேட்டு வைத்தால், "எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்துவிடும்" என்ற இந்த நொண்டிச் சாக்கின் தலையில் பழியைத் தூக்கிப் படாரென்று போடுவது வழக்கமாகி விட்டது.

எப்படியோ, எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடக் கூடாது என்னும் விஷயத்தில் யுத்தம் புரிந்துகொண்டிருக்கும் இரண்டு கட்சியாரும் வெகு அக்கரையாக இருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

எதிரிக்கு இது வரை எத்தனை கப்பல்கள் நஷ்டம்? ஊஹூம், சொல்லமாட்டார்கள். எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்துவிடும்!

எதிரிக்குத் தெரிந்த தகவல் கூட நம் மூலமாய் அவனுக்குப் போய்ச் சேர்ந்துவிடக் கூடாது! எதிரியிடம் எத்தனை விமானங்கள் இருக்கின்றன? ஊஹூம், சொல்ல மாட்டார்கள். எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும். நம் விமானத் தாக்குதல்களினால் எதிரிக்கு எவ்வளவு நஷ்டம்? ஊஹூம், சொல்ல மாட்டார்கள். எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும். இந்த ரீதியில் இப்போதைய யுத்தம் நடந்து வருகிறது.

இதைக் கவனிக்கும்போது இதே ரீதியில் போனல் அடுத்த யுத்தம் வெகு வேடிக்கையாகத்தான் இருக்கும் என்று தோன்றுகிறது.

தற்காலத்தில் யுத்தம் ஆரம்பிப்பதற்கு ஒரு வருஷத்துக்கு முன்னிருந்தே எத்தனை பரபரப்பு காணப்படுகிறது! இந்த நாட்டுப் பிரதம மந்திரி ஏதாவது காரசாரமாக ரேடியோவில் ஒரு மணி நேரம் அலறுகிறர். உடனே பதிலுக்கு அந்த நாட்டுப் பிரதம மந்திரி இரண்டு மணி நேரம் அலறுகிறர். உடனே அடுத்த நாளே பங்கு மார்க்கெட்டு கிடு கிடு என்று உயர்ந்து விடுகிறது.

பங்கு மார்க்கெட்டு உயர்கிறது, தாழ்கிறது என்றல் எனக்கு என்னவென்றே தெரியாது. தினசரிப் பத்திரிகைக்காரர்கள் சொல்லுகிறர்களே என்று நானும் சொல்லுகிறேன். ஆனல் பிரதம மந்திரிகளின் அலறலுக்கும், பங்கு மார்க்கெட்டுகளின் உயரத்துக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்பது மட்டும் நிச்சயம்.

பிறகு இந்த வெளிநாட்டு மந்திரி அந்த வெளிநாட்டு மந்திரியைப் போய்ப் பார்க்கிறர். அந்த வெளிநாட்டு மந்திரி இந்த வெளிநாட்டு மந்திரியைப் பார்க்கிறர். பிறகு இரண்டு வெளிநாட்டு மந்திரிகளும் சேர்ந்து மூன்றவது வெளிநாட்டு மந்திரி யொருவரைப் பார்ப்பதற்காகச் செல்கிறர்கள். அந்த வெளிநாட்டு மந்திரி ஒரு கடிதத்தில் நான்கு வரிகளைக் கிறுக்கி, இரண்டு பேரையும் கையெழுத்துப் போடும்படி சொல்லுகிறர். ஆனல் இரண்டு பேரும் போட மறுக்கிறர்கள்.

இதைப் பார்த்து விட்டு மூன்றுவது வெளிநாட்டு மந்திரி கையை விரிக்கிருர். இவரைப் பின்பற்றி இந்த இரண்டு வெளி நாட்டு மந்திரிகளும் கையை விரிக்கிருர்கள். பிறகு எல்லாரும் வயிறு புடைக்கச் சாப்பிட்டு விட்டு, அவரவர்கள் ஊருக்குப் போய்ச் சேர் கிருர்கள். ஊர் போய்ச் சேர்ந்ததும், இரண்டு பேரில் ஒருவர் ஒரு தேதி கெடு வைத்து 'அல்டிமேட்டம்' கொடுக்கிருர். இதைப் பார்த்து விட்டு, இன்னெரு வெளி நாட்டு மந்திரி ஒன்றும் செய்யாமல் சிரித்துக்கொண்டே இருக்கிருர்.

கடைசியில் கெடு தேதி முடிகிறது. இத்தனும் தேதி, இத்தனை மணிக்கு உன்னுடன் யுத்தம் ஆரம்பிக்கப் போகி றேன் என்று யுத்தப் பிரகடனம் செய்யப்படுகிறது. யுத்த மும் ஆரம்பிக்கிறது.

ஆகக்கூடி ஒரு வருஷம் முதற்கொண்டே யுத்தம் வரப்போகிறது என்கிற விஷயம் எல்லாருக்கும் தெரிந்து போகிறது. காகிதம் விற்றுக் கொள்ளை லாபம் அடிக்க விரும்புகிறவர்கள் காகிதம் வாங்கிப் பதுக்கி வைக் கிருர்கள். பஞ்சு வாங்கிக் கொள்ளை லாபம் அடிக்க விரும்புகிறவர்கள் பஞ்சை வாங்கிப் பதுக்கி வைக்கிருர்கள். மருந்து வாங்கிக் கொள்ளை லாபம் அடிக்க விரும்புகிற வர்கள் மருந்து வாங்கிப் பதுக்கி வைக்கிருர்கள். ஒன்றும் பதுக்கி வைக்க முடியாதவர்கள், கடன்காரர்களைக் கண்ட தும் தாங்கள் பதுங்கிக் கொள்ளுகிருர்கள்.

ஆனல் அடுத்த யுத்தம் இந்த ரீதியில் இருக்காது. யுத்தம் வரப்போகிறது என்று தெரிந்தாலே எதிர்க்கட்சிக்

காரன் தயாராகி விடுவான் அல்லவா? ஆகவே எதிரிக்குத் தகவல் போய்ச் சேராதிருப்பதற்காக, வழக்கமாக யுத்தத் துக்கு முந்திக் காணப்படும் சின்னங்கள் இருக்கா.

இரண்டு நாட்டுப் பிரதம மந்திரிகளும் ரேடியோவில் அலற மாட்டார்கள். பங்கு மார்க்கெட்டுகளும் உயர மாட்டா. அப்படி அவை உயர்ந்து நிற்பதற்குப் பிரயத் தனப் பட்டாலும், தலையில் தட்டி, கீழே உட்கார்த்தி வைத்து விடுவார்கள்.

சிப்பாய்களுக் கெல்லாம் ராணுவ உடை அளித்தால், நம்முடைய ராணுவ பலம் எத்தனை என்று எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடும் அல்லவா? அதற்காகச் சிப்பாய்களுக்கெல்லாம் சாதாரண உடை அளித்து, பொது ஜனங்களுக்கு ராணுவ உடை அளிப்பார்கள். தாங்கள் யுத்தத்தை ஆரம்பித்து வைத்துவிட்டதாக எதிரிக்குத் தகவல் போய்ச் சேர்ந்து விடக் கூடாதல்லவா? அதற்காக யுத்தப் பிரகடனமே செய்ய மாட்டார்கள். ஏன், இன்னும் ஒரு படி மேலேயே போய், எந்த நாட்டுடன் யுத்தம் தொடுத் திருக்கிறார்களோ அந்த நாட்டைப் புகழ்ந்து கொண்டே யிருப்பார்கள்.

யுத்தம் வந்துவிட்டது என்பதற்கு அறிகுறிகளான கறுப்பு (பிளாக்) மார்க்கெட்டோ, மஞ்சள் ரேஷன் கார்டோ, சிவப்பு ரேஷன் கார்டோ இருக்காது. ஏன், இருட்டடிப்புக் கூட இருக்காது. இருட்டடிப்பு இருந்தால் யுத்தம் ஆரம்பித்து விட்டது என்று எதிரி தெரிந்துகொண்டு விடுவான் அல்லவா?

ரயிலில் கூட்டமே இருக்காது. இப்பொழுதெல்லாம், ரயிலுக்கு டிக்கட் வாங்குவதற்கு முன்னர், நம் பிரயாணம் அவசியம்தானு என்று நம் மனச் சாட்சியைத் தொட்டுப் பார்த்துக் கொண்ட பின்னரே டிக்கட் வாங்கச் சொல்லு கிருர்கள் அல்லவா? அடுத்த யுத்தத்தின்போது நம் மனச் சாட்சியை எங்கே இருக்கிறது என்று தேடிக் கண்டு பிடித்து, பிறகு அதைத் தொட்டுப் பார்த்துக் கொள்ள வேண்டிய தொந்தரவு இருக்காது. அதற்குப் பதில் கண்ணை மூடிக் கொள்ளவேண்டிய சிரமம்தான் இருக்கும்.

யுத்தம் நடந்து கொண்டிருக்கவில்லை என்று காண்பித்துக் கொள்வதற்காக, "கண்ணை மூடிக்கொண்டே எங்கு வேண்டுமானுலும் பிரயாணம் செய்யுங்கள்" என்று சர்க்கார் ஜனங்களைக் கேட்டுக் கொள்வார்கள். சர்க்கார் உத்தரவுக்கு எதிராகவே நடந்து, நடந்து பழகிப்போன ஜனங்கள், இதற்காகவே ரயிலில் பிரயாணம் செய்ய மாட்டார்கள்.

சாமான் பண்டங்கள் இப்பொழுது உள்ளதுபோல் விலை ஏறமாட்டா. சாமான்களும் தேவைக்கு அதிக மாகவே கிடைக்கும். இப்பொழுது உள்ளதுபோல் தலைவலி என்று ஆபீசுக்கு லீவு போட்டு விட்டு, விறகு வேட்டை ஆட வேண்டியிருக்காது.

அடுத்த யுத்தம் ஒரு விஷயத்தில் மிக செளகரியமாக அமையும் என்று கூடச் சொல்லலாம். யுத்த நிதியே வசூல் பண்ணமாட்டார்கள். யுத்தக் கடனைச் சமாளிப் பதற்காக இப்பொழுது ஒரு ரூபாய்க்கு நோட்டுப் போட்

டிருக்கிறார்களே, அதைப் போலப் போடமாட்டார்கள். யுத்தம் ஒன்றும் நடக்கவில்லை என்று காண்பிப்பதற்காகப் பத்து ரூபாய்க்குக் கூட நோட்டு இருக்காது.

ஏன், அடுத்த யுத்தத்தின்போது வெடிகுண்டுகள் வெடிக்குமா என்பதே சந்தேகந்தான். வெடிகுண்டு சப்தத்தைக் கொண்டு யுத்தம் நடக்கிறது என்று எதிரி தெரிந்து கொண்டு விடலாம் அல்லவா?

ஏன், இதுபோன்று "அடுத்த யுத்தம்" என்று தலைப்புப் போட்டுக்கொண்டு கட்டுரை எழுதக்கூட விட மாட்டார்கள். 'அடுத்த யுத்தம்' என்ற தலைப்பைப் பார்த்து விட்டு, 'இந்த யுத்தம்' ஒன்று நடக்கிறது என்று எதிரி தெரிந்து கொண்டு விடலாம் அல்லவா?

# என்ன ஸார், உங்களைத்தானே!

"என்ன ஸார்! ஹி! ஹீ!! சௌக்கியந்தானு?"

"....................................."

"உங்களைத்தான் ஸார்! ஹி! ஹீ!"

"....................................."

"என்ன ஸார்! உங்களைத்தான் ஸார்! ஹி! ஹீ! சௌக்கியந்தானு?"

மின்சார ரயிலில் எனக்கு எதிரே உட்கார்ந்திருந்தவர் தம் முகத்தை என் முகத்தில் இடிக்கும்படியாய்க் கொண்டு வந்து, "என்ன ஸார்! உங்களைத்தான் ஸார்! ஹி! ஹீ! என்ன அப்பொழுது பிடித்துக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். பேசாமல் இருக்கிறீர்களே" என்று கேட்ட பிறகு தான் இத்தனை நாழியாக அவர் என்னைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தார் என்பது தெரிந்தது.

உடனே, "நீங்களா, ஹி! ஹீ!" என்று பல்லை இளித்துவிட்டுத் திரும்பவும் நான் கையில் வைத்துக் கொண்டிருந்த புஸ்தகத்தில் ஆழ்ந்தேன்.

காரிருளில் ஒரு மின்னலைப்போல் நான் "ஹி! ஹீ!" என்று ஒரு புன்முறுவல் செய்து விட்டுத் திரும்பவும் முகத்தை மூடிக் கொண்டதிலிருந்து நான் அவரை

அடையாளம் புரிந்து கொள்ளவில்லை என்று அவர் தெரிந்து கொண்டார்.

"என்ன ஸார்! அடையாளம் தெரியவில்லையா? அதற்குள்ளாகவா மறந்து விட்டீர்கள்?" என்று கேட்டார்.

"இல்லை ஸார்! தயவு செய்து மன்னிக்க வேண்டும். எனக்கு ஞாபக மறதி ஜாஸ்தி—" என்று ஆரம்பித்தேன்.

நான் சொல்லி முடிப்பதற்குள் அவர் இடைமறித்து, "அப்படியானால் ஒரு நூறு ரூபாய் கை மாத்தாகக் கொடும்" என்று ஒரு ஹாஸ்ய வெடி குண்டைத் தூக்கிப் போட்டார்.

எனக்கு ஞாபக சக்தி இல்லையாதலால் அவருக்குக் கொடுத்த பணத்தை உடனே மறந்து விடுவேன் என்பது அவர் எண்ணம்!

இதுமாதிரி அனுபவம் எனக்குத் தினம் உண்டாகிறது. பார்த்த மனிதர்களை மறந்து விடுகிறேன். நடந்த விஷயங்கள் மறந்து விடுகின்றன. என்னை யாராவது அவமானப்படுத்தினால் அவர்களைப் பதிலுக்குப் பதில் அவமானப்படுத்த வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருக்கையிலேயே அது மறந்து விடுகிறது.

கிட்டத்தட்ட எல்லாப் புருஷர்களும் என்னைப்போல்தான் இருக்கிறார்கள். எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை ஒவ்வொரு மாதமும் "மறந்து விட்டது, மறந்து விட்டது" என்று சால்ஜாப்பு சொல்லி வரும் அடுத்த வீட்டு

அண்ணுசாமி அய்யர்கூட உண்மையைத்தான் சொல்லு கிருரோ என்று தோன்றுகிறது.

ஏனெனில் எனக்குத் தெரிந்தவரை ஸ்திரீகளுக்கு உள்ள ஞாபக சக்தி புருஷர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

அப்பா! இந்த ஸ்திரீகளுக்குத்தான் என்ன ஞாபக சக்தி!

ஸ்திரீகளுக்கு இருக்கும் ஞாபக சக்தியை நீங்கள் பிரத்தியக்ஷமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானல் அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. நம் வீட்டு ஸ்திரீகள் அவ்வப்பொழுது அப்பளக் கச்சேரிகள் நடத்து கிருர்களே, அதைக் கவனித்தால், அதாவது அவர்கள் பேசுவதையெல்லாம் காது கொடுத்துக் கேட்டால் நான் சொல்வதன் உண்மை விளங்கும்.

ஸ்திரீகள் அப்பளக் கச்சேரி நடத்தும்போது, அவர்கள் பேசுவது காதில் விழும்படி பக்கத்தில் போய் எப்படி உட்கார முடியும் என்று சில அசட்டு ஆண் நேயர்கள் கேட்கலாம்.

இவர்களுக்கு நான் என்ன பதிலைச் சொல்ல! கூடத்தில் ஸ்திரீகள் அப்பளக் கச்சேரி நடத்தும்போது, நாம் ரேழியிலோ, அல்லது பக்கத்து அறையிலோ தூங்குவது போல் பாசாங்கு செய்துகொண்டே அவர்கள் பேசுவதைக் கவனித்தால் யாராவது நம்மை அடிக்கிருர்களா, என்ன?

இதற்குக்கூடத் தைரியமில்லாத தொடை நடுங்கி நேயர்களுக்காக நான் சமீபத்தில் இதே முறையில் கவனித்த

அப்பளக் கச்சேரியில் நடந்த சம்பாஷணையில் ஒரு பகுதியை உதாரணத்துக்காகக் கொடுக்கிறேன்.

என் தாயார் :—என்ன கமலம்! (கமலம் என்பது அப்பளக் கச்சேரி அங்கத்தினர்களில் ஒருவர்) இன்றைக்கு என்ன சமையல்?

கமலம் :—இன்றைக்கு ஒன்றும் இல்லை. கீரையை மசியல் பண்ணி, வெத்தக் குழம்பு வைத்திருந்தேன்.

தாயார் :—கீரை மசியல் என்றால் எங்கள் புக்ககத்துக் கிழவருக்கு (அதாவது என் தகப்பனாரின் தாத்தாவுக்கு) உயிர். என்னைக் குடித்தனம்வைத்த புதிதில் (என்ன ஞாபகம் பாருங்கள்! என் தாயாருக்கு இப்போது வயது ஐம்பத்தைந்து. குடித்தனம் வைத்தது பதினைந்து வயதில். அதாவது நாற்பது வருஷங்களுக்கு முன்னர் நடந்த சமாசாரத்தை என் தாயார் ஞாபகம் வைத்துக்கொண்டு சொல்லப்போகிறாள்!) ஒரு நாள் என்னைப் பார்ப்பதற்காக எங்கள் புக்ககத்துக் கிழவர் வந்திருந்தார். அதற்கு முதல் நாள்தான் உருளைக் கிழங்கு கறி பண்ணி, வெங்காய சாம்பார் வைத்தேன். (என்ன ஞாபகம் பாருங்கள்! நாற்பது வருஷங்களுக்கு முன்னர் தான் பண்ணின சமையலைக் கூட இந்த ஸ்திரீகள் ஞாபகம் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றால் இவர்கள் சாமர்த்தியத்தை என்னவென்று சொல்ல!)

ஆகவே அன்றைக்குக் கீரை மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணினால் போதும் என்று அவர் சொல்லி விட்டார். அன்றைக்கு என்று கிழவர் வந்து நின்றாரே பார்க்கணும்! எனக்கா அன்றைக்கு என்று கீரை

மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணியிருக்கிறோமே, தினம் போரனுக்கு இப்படித்தான் சமைத்துப் போடுகிறோம் என்று நினைத்துக் கொள்ளப் போகிறாரோ என்ற பயம். ஆனால் அன்றைக்குக் கிழவர் சாப்பிட்ட ஆனந்தத்தைப் பார்க்கணுமே! 'நான் வருகிறேன் என்று தெரிந்து, எனக்கு என்று பண்ணி வைத்ததுபோல் எப்படி கீரை மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணினாய்' என்று கேட்டு, வெகு ஆசையாகச் சாப்பிட்டார்.

கமலம்:—நீங்கள் இதைச் சொல்றேளே, நான் முன்பு தலைச்சனைப் பிள்ளையாண்டிருந்தேனே, அப்பொழுது இப்படித்தான், என் மாமனார் திடுதிப்பென்று வந்து நின்றார். (இந்த அம்மாள் தலைச்சனைப் பெற்று, அந்தத் தலைச்சனுக்கும் தலைச்சன், இடைச்சன் எல்லாம் பிறந்தாகி விட்டது. இருந்தும் அத்தனை வருஷங்களுக்கு முன்னர் நடந்த விஷயத்தை இந்த அம்மாள் இன்னும் ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பதைக் கவனியுங்கள்!)

இப்படியாகத்தானே அப்பளக் கச்சேரியைக் கூர்ந்து கவனித்தால் இருபது முப்பது வருஷங்களுக்கு முன்னர் தாங்கள் பண்ணின சமையல், தாங்கள் கட்டிக்கொண்டிருந்த புடவை, தங்கள் ஓரகத்தி கட்டிக் கொண்டிருந்த புடவை, எதிர்த்த வீட்டு அம்மாள் கட்டிக்கொண்டிருந்த புடவை, பக்கத்து வீட்டு அம்மாள் கட்டிக் கொண்டிருந்த புடவை, தங்கள் கணவனுக்கு அப்பொழுது கிடைத்து வந்த சம்பளம், அவர்கள் கணவன் கறிகாய் வாங்கும் விலை, அதே கறிகாயைத் தாங்கள் வாசலில் வாங்கிய விலை, ஆகிய ஆயிரத்தெட்டு விஷயங்களை அவர்கள் நுணுக்கமாக

ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப் படுவீர்கள்.

நல்ல வேளையாக ஸ்திரீகளுக்கு நாம் அதிக ஆதிக்கம் தரவில்லை. தந்தோமோ, இத்தனை ஞாபக சக்தியைக் கொண்டு, நாம் செய்த பழைய குற்றங்களை யெல்லாம் ஞாபகம் வைத்துக்கொண்டு நம்மை வாட்டிப் பிழிந்து விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஸ்திரீகள் ஞாபக சக்தியினால் கெடுதலே தவிர நன்மை கிடையாது என்பதற்கு ராமாயணத்திலேயே ஒரு பெரிய உதாரணம் கிடக்கிறது பாருங்கள்.

பதினாயிரம் ஆண்டுகள் ஆண்ட தசரதர் எந்தக் காலத்திலோ கைகேயிக்குக் கொடுத்த வரங்களைக் கூனி ஞாபகம் வைத்துக்கொண்டு கைகேயியிடம் சொல்லக் கொண்டு தானே ராமன் காட்டுக்குப்போக நேர்ந்தது?

............ஆகவே, சரசு! இந்தக் கடிதம் கண்டதும்.... சீ! சீ! என்ன ஞாபக மறதி! கட்டுரை எழுதிக்கொண்டே இருந்தவன், மறந்து போய் ஊரில் இருக்கும் சரசுவுக்குக் கடிதம் எழுத ஆரம்பித்துவிட்டேன்!

# பேட்டி கண்டேன்!

[இந்திய அரசியல் நிலைமையைத் தெளிவு படுத்துவதற்காக ஒரு நாள் என்னை நானே பேட்டி கண்டேன். என்னை நான் கேட்ட கேள்விகளும், அதற்கு நான் இறுத்த பதில்களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.]

கேள்வி:—இந்திய அரசியல் நிலைமையைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

பதில்:—என் அபிப்பிராயமா? இந்திய அரசியல் நிலைமையில் இப்பொழுது பெருத்த நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது.

கேள்வி :—நெருக்கடி என்றால்?

பதில் :—மூன்றாவது வகுப்பு ரயில் வண்டியில் ஏறப் போகும் பிரயாணி, வண்டியிலும் ஏற முடியாமல், கீழேயும் இறங்க முடியாமல் கதவுக்கருகிலேயே நின்று கொண்டு தவிக்கிறானே, அதற்குத் தான் 'நெருக்கடி' என்று பெயர்!

கேள்வி :—இந்த நெருக்கடி எப்பொழுது ஏற்பட்டது?

பதில் :—ஐரோப்பாவில் யுத்தம் ஆரம்பித்ததும் ஏற்பட்டது.

கேள்வி :—அப்படியானல் இப்பொழுது ஐரோப்பிய யுத்தம் தீர்ந்து விட்டதே, நெருக்கடியும் தீரவேண்டும் அல்லவா?

பதில் :—ஆம், தீரத்தான் வேண்டும். ஆனல்..........

கேள்வி :—ஆனல்?

பதில்:—ஆனல் நெருக்கடி இன்னும் தீரவில்லை.

கேள்வி :—நெருக்கடி ஏன் தீரவில்லை?

பதில் :—ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒத்துப் போக வில்லை.

கேள்வி :—ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஏன் ஒத்துப் போகவில்லை?

பதில் :—ஜனப் ஜின்ன முட்டுக்கட்டை போட்டதனல்.

கேள்வி :—ஜனப் ஜின்ன ஏன் முட்டுக்கட்டை போட்டார்?

பதில் :—நாம் எல்லோரும் ஒத்துப் போகாததால்.

கேள்வி :—அப்பொழுது நெருக்கடி தீர நாம் என்ன பண்ண வேண்டும்?

பதில் :—நாம் எல்லோரும் ஒன்றுபட வேண்டும்.

கேள்வி :—ஒன்றுபட்டு........?

பதில் :—நம் பலத்தைத் திரட்ட வேண்டும்.

கேள்வி :—நம் பலத்தைத் திரட்டி....?

பதில் :—கிளர்ச்சி செய்ய வேண்டும்.

கேள்வி :—என்னவென்று கிளர்ச்சி செய்ய வேண்டும்?

பதில் :—தலைவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று கிளர்ச்சி செய்ய வேண்டும்.

கேள்வி :—உடனே என்ன நடக்கும்?

பதில் :—தலைவர்கள் விடுதலை பெறுவார்கள். சிறைச் சாலைகளிலிருந்து வெளியே வருவார்கள்.

கேள்வி :—வெளியே வந்து என்ன செய்வார்கள்?

பதில் :—நேரே ஆஸ்பத்திரிக்குப் போவார்கள்!

கேள்வி :—எதற்காக?

பதில் :—தங்கள் உடலைக் குணப்படுத்திக் கொள் வதற்காக.

கேள்வி :—உடலைக் குணப்படுத்திக்கொண்டு?

பதில் :—நாடு முழுவதும் போய்ப் பிரசாரம் செய் வார்கள்.

கேள்வி :—என்ன வென்று பிரசாரம் செய்வார்கள்?

பதில் :—நாம் எல்லோரும் ஒன்றுபடவேண்டுமென்று பிரசாரம் செய்வார்கள்.

கேள்வி :—நாம் எல்லோரும் ஒன்றுபட்டு........?

பதில் :—நம் பலத்தைத் திரட்டிக் கொள்ள வேண்டும்.

கேள்வி :—பலத்தைத் திரட்டிக்கொண்டு?

பதில் :—சுதந்திரக் கோரிக்கையை வலியுறுத்த வேண்டும்.

கேள்வி :—வலியுறுத்தினால்?

பதில் :—தலைவர்கள் சிறையில் அடைக்கப்படுவார்கள்.

கேள்வி :—தலைவர்கள் சிறையில் அடைக்கப்பட்டதும் நாம் என்ன பண்ண வேண்டும்?

பதில் :—அவர்கள் விடுதலைக்காகக் கிளர்ச்சி செய்ய வேண்டும்.

கேள்வி :—அதற்கு நாம் என்ன பண்ணவேண்டும்?

பதில் :—நாம் எல்லோரும் ஒன்றுபடவேண்டும்.

கேள்வி :—என்ன ஐயா, எதற்கெடுத்தாலும் ஒன்றுபடவேண்டும் என்கிறீர்? எதற்காக ஒன்றுபடவேண்டும்?

பதில் :—ஒன்றுபட்டாலுண்டு வாழ்வே!

கேள்வி :—நம்முள் ஒற்றுமை நீங்கில்........?

பதில் :—அனைவர்க்கும் தாழ்வே!

[இந்தச் சமயத்தில் என்னைப் பேட்டி காண வேறொரு நிருபர் வந்து விட்டபடியால் நான் அங்கிருந்து நகர வேண்டியதாயிற்று.]

# பெரிய மனிதர்கள்!

என் மேல் மிகவும் அக்கரையாக இருக்கும் என் நெருங்கிய நண்பர்களுக்கும் என் மனைவி சரசுவுக்கும் இப்பொழுதே சொல்லி விட்டேன். நான் ஒரு காலத்தில் பெரிய மனிதனாக ஆகப் போகிறேன் என்றும், அப்பொழுது எனக்கு வரும் பெயரிலும், புகழிலும் தாங்களும் ஒரு பங்கு அடையலாம் என்றும் அவர்கள் கனவு கண்டு கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அந்தோ, பரிதாபம்! அவர்கள் ஆசையை நான் ஒருக்காலும் நிறைவேற்ற மாட்டேன் போல் தோன்றுகிறது. 'பெரிய மனிதனின் சிநேகிதன்' 'பெரிய மனிதனின் மனைவி' என்று சொல்லிக் கொள்ளும் சந்தர்ப்பம் அவர்களுக்குக் கிடைக்காது என்றே நான் அஞ்சவேண்டியிருக்கிறது.

'ஏன், பெரிய மனிதன் ஆவதில் தங்களுக்கு இத்தனை வெறுப்பு!" என்று நேயர்கள் கேட்கலாம். ஆனால் உண்மையில் பெரிய மனிதன் ஆக வேண்டும் என்பதில் எனக்குத் துளிக்கூட வெறுப்பில்லை. அதுவும் அனு (அது தான் என் ஏழு மாதப் பெண் அனுராதா) பிறந்ததிலிருந்து, வேறு யாரை உத்தேசித்து இல்லாவிடினும், அவளை உத்தேசித்தாவது நான் பெரிய மனிதன் ஆகவேண்டும் என்று வெகு ஆவலாக இருக்கிறேன். எல்லாரும் என் பெண்

அனுவைப் பார்த்து "பெரிய மனிதனின் பெண்" என்று சொல்ல வேண்டும் என்பதற்காக பெரிய மனிதனுவதற்கு வேண்டிய எல்லா முயற்சிகளும் செய்து வருகிறேன். ஆனல், ஊஹூம், நான் என்ன செய்தும், பெரிய மனிதர் களுக்கு இருக்கும் குணம் ஒன்ருவது எனக்குப் படியவே படியாது போலிருக்கிறது.

முதலில், பெரிய மனிதன் என்ருல் யாரையும் தம்மை லகுவில் பார்க்க விடமாட்டார். தம்மைப் பார்க்க வருகிறவர்கள் எவ்வளவு தொலேவிலிருந்து வந்தாலும் சரி, என்ன அவசர காரியமாக வந்தாலும் சரி, அவர்களே நாலேந்து தடவையாவது அலேக்கழித்த பிறகுதான் பார்ப் பதற்கு இசைவார்.

பெரிய மனிதரைப் பார்க்க நாம் கால் நடையாகப் போய்ச் சேர்ந்தோமோ, அவருக்கு நம்மைப் பார்க்க ஒழியவே ஒழியாது. நம்மைப் பார்த்ததுமே வாசலில் இதற்கென்றே நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் வேலேக் காரன், ஏக வசனத்தில் "போ, ஐயா! இப்ப உன்னேப் பார்க்க எஜமானருக்கு ஒழியாது" என்று சொல்லி விடுவான்.

கால் நடையாகச் செல்லாமல் மாட்டுவண்டி அல்லது ஜட்கா வண்டியில் சென்ருேமோ, பாதி அரை மனதுடன் நாம் யார், நாம் வந்த காரியம் என்ன முதலிய விஷயங்களே ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி வாங்கிக் கொள்வான். உள்ளே போய் மறைவாகக் கொஞ்ச நேரம் இருந்து விட்டுத் திரும்பி வந்து, "ஐயா ரொம்ப காரியமாக இருக் காங்களாம். இப்பொழுது ஒழியாதாம்" என்று உள்ளே

இருக்கும் அவரைப் போய்த்தான் கேட்டதாகவும், அவரே அப்படி பதில் சொல்லி அனுப்பி விட்டது போலவும் சொல்லுவான்.

ஆனால் வண்டியில் போகாமல் மோட்டார் வண்டியில் போனீர்களோ வேலைக்காரன் ஓடோடியும் வந்து உங்கள் மோட்டார் வண்டியின் கதவைத் திறந்து விடுவான். உங்களை வாசலில் போடப்பட்டிருக்கும் சோபாவில் உட்கார வைத்து விட்டு, உங்கள் 'விசிட்டிங் கார்'டை எடுத்துக் கொண்டு உள்ளே ஓடுவான். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் திரும்பி வந்து, நன்றாக ஆற, அமர உட்கார்ந் திருக்கிறவரையே பார்த்து, "உட்காருங்க. இதோ வந்துட்டேன்னு சொன்னாருங்க!" என்பான்.

எஜமான் சொன்ன "இதோ" எத்தனை நிமிஷம் கொண்டது என்பது வந்திருக்கும் ஆளைப் பொறுத்தது. சாதாரணமாக இந்த "இதோ"வின் கால வரையறை பத்து நிமிஷத்திலிருந்து ஒரு மணி வரையில் நீளும்.

எவ்வளவுதான் வேண்டிய ஆசாமியாக இருந்தாலும், தம்மைப் போலவே பெரிய மனிதனாக இருந்தாலும், ஒரு பத்து நிமிஷமாவது அவரைக் காக்க வைத்துவிட்டுத் தான் உள்ளே யிருக்கும் பெரிய மனுஷர் வெளியே இருப்பவ ரைப் பார்க்க வருவார். அப்பொழுதுதான் தம்மைப் பற்றி வெளியே இருப்பவருக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்படும் என்பது பெரிய மனிதரின் எண்ணம்.

கடைசியில் பெரிய மனிதர் வெளியே வருவார். எவ்வளவுக் கெவ்வளவு நாழி கழித்து வருகிறாரோ, அவ் வளவுக் கவ்வளவு முகத்தைக் கடுமையாக வைத்துக்

கொண்டு வருவார். எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக வருகிறுரோ (அதாவது அந்தப் பத்து நிமிஷ காலத்துக்குப் பிறகுதான்) அவ்வளவுக் கவ்வளவு மன்னிப்புக் கேட்டுக் கொண்டே வருவார்.

அதாவது, பத்து நிமிஷத்துக்குப் பிறகு வந்தால் "மன்னிக்க வேண்டும், ஒரு முக்கிய காரியத்தைத் கவனித் துக் கொண்டிருந்தேன்" என்று நான்கு தடவை மன்னிப் புக் கோருவார். பதினைந்து நிமிஷம் கழித்து வந்தால் மூன்று தடவை மன்னிப்புக் கோருவார். இருபது நிமிஷம் கழித்து வந்தால் மன்னிப்புக் கோருவது இரண்டு தடவை யாக மாறும். அரைமணி ஆனுல் இது ஒரு தடவையில் வந்து நிற்கும். அதற்கு மேல் கடு கடுப்பும், சிடு சிடுப்பும், எத்தனை நாழி கழித்து வருகிறுரோ அத்தனை அதிகரித்துக் கொண்டே போகும்.

எப்படியோ பெரிய மனிதர் கடைசியில் வெளியே வருகிறுர். ஆனுல் வந்ததும் நம்மை யார் என்று அடையா ளம் புரிந்து கொள்வாரா? மாட்டார். அத்தனைக்கும் அவரை நீங்கள், இதற்கு முன்னர் எத்தனையோ தடவை ஒரு மணியும் இரண்டு மணியும் காத்திருந்து பார்த் துப் பேசியிருப்பீர்கள். இருந்தும் அவர் உங்களை மறந்து விடுவார். நீங்கள் முன் பத்து தடவைகளில் சொன்னது போலவே இந்தத் தடவையும் உங்கள் வரலாற்றை ஆதியோடு அந்தமாகச் சொல்ல வேண்டும். ஆனுல் நீங்கள் என்ன சொன்னுலும் அவர் ஏதோ கனவு லோகத் தில் இருப்பது போலவே நீங்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பார்.

பெரிய மனிதர்களுக்கு இன்னொரு குணமும் உண்டு. அதாவது ஏதாவது கூட்டத்துக்குப் போக வேண்டியிருந் தாலும் சரி, அல்லது நல்ல சினிமா, டிராமா கச்சேரி முதலியவற்றுக்குப் போக வேண்டி யிருந்தாலும் சரி, தங்கள் ஆசை, இஷ்டம் இவற்றின்படி நடக்க மாட் டார்கள்.

நல்ல கச்சேரியாக இருக்கலாம், முதலிலேயே போய்க் கடைசி வரையில் இருந்து கேட்கவேண்டும் என்று ஆசை இருக்கலாம். ஆனால் இந்த ஆசையை அவர்கள் நிறைவேற் றிக் கொள்ள மாட்டார்கள். அப்படி நடந்து கொள்வது பெரிய மனுஷத்தனத்துக்கே புறம்பானது என்பது பெரிய மனிதர்களின் துணிபு.

ஆகவே பாதிக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும் போதுதான் உள்ளே போவார்கள். அப்பொழுதுதானே எல்லாரும் இவர்களைக் கவனிக்க முடியும்! அப்பொழுது தானே எல்லாரும் இவர்களைப் பார்த்து, "ஏதோ முக்கிய காரியம்போல் இருக்கிறது. அதுதான் கச்சேரியின் ஆரம் பத்தில்கூட வரமுடியாமல் இத்தனை நாழி கழித்து வரு கிறார்" என்று எண்ணிக் கொள்ள முடியும்?

அதேமாதிரி பாதிக் கச்சேரியில் வந்தவர்கள் முக்கால் கச்சேரியில் எழுந்துபோய் விடுவார்கள்.

பக்கத்தில் இருப்பவர்கள், "கடைசிவரை இருந்து விட்டுப் போகக் கூடாதோ?" என்று கேட்டால், "அவசரமான வேலை. மன்னிக்க வேண்டும்" என் பார்கள். இதுதான் எப்பொழுதும் அவர்களிடமிருந்து கிடைக்கும் பதில்.

எனக்கு ஒரு பெரிய மனிதரின் மனைவி உறவு. பாவம், அந்த அம்மாளைப் பார்க்க நான் போகும்போதெல்லாம் அந்த அம்மாள் சொல்லிச் சொல்லி வருத்தப்படுவாள். அந்த அம்மாள் தன் புருஷனுடன் பெரிய மனிதருடன் எத்தனையோ சினிமாக்கள், நாடகங்கள், கச்சேரிகள் போயிருக்கிறாள். ஆனால் ஒரு கச்சேரியையாவது முழுசாகக் கேட்டதில்லை. அவள் போனபோதெல்லாம் மிருதங்க ஆவர்த்தனம் நடந்து கொண்டிருக்கும். மிருதங்க ஆவர்த்தனம் முடிகிற சமயத்தில் அவள் திரும்பி வந்துவிட வேண்டி யிருக்கும். ஆகக்கூடி அவள் ஒரு கச்சேரியிலும் பாடகரோ, பாடகியோ பாடிக் கேட்டதில்லை. மிருதங்க ஆவர்த்தனம் ஒன்றுதான் கேட்டிருக்கிறாள்.

இதே கதிதான் சினிமா விஷயத்திலும். கதாநாயகனும், கதாநாயகியும் ஒருவரை விட்டு ஒருவர் மனம் இல்லாமல் பிரியும் காட்சியில் தான் போய்ச் சேர்ந்திருக்கிறாள். கதா நாயகன் அகாரணமாகச் சிறையில் அடைக்கப்படும் கட்டத்தில் வெளியே வந்திருக்கிறாள். பாவம், கதா நாயகனுக்கும், கதா நாயகிக்கும் கல்யாணமாகிறதா, இல்லையா என்று அந்த அம்மாளுக்கு இன்னும் தெரியாது!

இன்னும் யாராவது சிநேகிதர்களைப் பார்க்கப் போனால்கூட அந்த அம்மாளால் ஆசை தீர வெகு நேரம் பேசிக் கொண்டிருக்க முடியாது. போனதும் வந்ததுமாக ஓடி வந்துவிட வேண்டும். "நீ சௌக்கியமா? நான் சௌக்கியம். சரி, நான் வருகிறேன். அவசர வேலை இருக்கிறது" என்று சொல்லிவிட்டு வரும் ஒரு நிமிஷ வேலைக்காக, ஒரு மணி நேர டிரஸ்ஸிங்கும், அரை மணி நேர

மோட்டார் சவாரியும் செய்வதென்றால் எந்த ஸ்திரீயால் தான் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

தான் கட்டிக் கொண்டிருக்கும் புதுப் புடவையைப் பற்றியோ, அல்லது தான் பார்க்கப் போகும் வீட்டு அம்மாள் கட்டிக் கொண்டிருக்கும் புடவையைப் பற்றியோ ஒருவருக் கொருவர் அபிப்பிராயம் பரிமாறிக் கொள்ளக் கூட நேரம் இல்லையென்றால் என்ன பெரிய மனுஷனின் மனைவி வேண்டியிருக்கிறது என்று அந்த அம்மாள் அலுத்துக் கொள்வாள்.

இந்தப் பெரிய மனிதரின் மனைவியைப் பற்றிச் சரசுவிடம் எத்தனையோ தடவைகள் சொல்லி யிருக்கிறேன். இருந்தும் சரசுவுக்குப் பெரிய மனிதனின் மனைவி ஆகும் ஆசை இன்னும் விடவில்லை. என்னைப் பெரிய மனிதன் ஆகும்படி வற்புறுத்திக் கொண்டே யிருக்கிறாள்.

பெரிய மனிதன் ஆகவேண்டும் என்றால் இன்னுமொரு தொல்லை. எப்பொழுது பார்த்தாலும் நம் உணர்ச்சிகளை அடக்கி வைத்துக் கொண்டே யிருப்பதுதான் பெரிய மனுஷத்தனம் என்று பெரிய மனிதர்கள் நினைக்கிறார்கள். சிரிக்க வேண்டிய விஷயங்களைப் பார்த்துச் சிரிக்கக் கூடாது, அழ வேண்டிய இடங்களில் அழக் கூடாது, எப்பொழுது பார்த்தாலும் உம்மணாமூஞ்சி மாதிரி முகத்தை 'உம்' மென்று வைத்துக் கொள்ள வேண்டும்.

இதெல்லாம் யாரால் முடிகிற காரியம்? நானும் முயன்று, முயன்று பார்க்கிறேன், இந்தக் குணங்களில் ஒன்றுகூட எனக்குப் படியமாட்டேன் என்கிறது. நானும்

"சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும்" என்று பெரிய மனுஷன் ஆகும் எண்ணத்தை விட்டு விட்டேன்.

ஆகையால் என் அருமை மிக்க நண்பர்களே! என் பிரியமுள்ள மனைவி சரசுவே! தயவு செய்து நான் பெரிய மனுஷன் ஆகப் போகிறேன் என்று நீங்கள் கண்டுகொண்டிருக்கும் கனவை அடியோடு மறந்து விடுங்கள்.

ஆனால் பாவம், என் அருமை அனுவை நினைக்கும்போதெல்லாம் அவளை உத்தேசித்தாவது எப்படியாவது பெரிய மனுஷன் ஆகக்கூடாதா என்று இருக்கிறது. என்ன பண்ணலாம்? எனக்குத் தான் பெரிய மனிதர்களின் சிறந்த குணங்களில் ஒன்று கூடப் படிய மாட்டேன் என்கிறதே!

# மகானுபாவர் வேவல்

[டில்லி வைஸராய் மாளிகையில் வேவல், குறுக்கும், நெடுக்கும் ராணுவ கவாத்து நடை நடந்து கொண்டிருக்கிறார். அவரைப் பின்பற்றி அவர் காரியதரிசி, அவர் பின்னாலேயே தாமும் கவாத்து நடை நடந்து கொண்டிருக்கிறார்.]

வேவல் :—சட்! சட்! சட்! சீ! சீ! சீ! தூ! தூ! தூ! என்ன வைஸராய்ப் பிழைப்பு வேண்டிக் கிடக்கிறது? எனக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. உடனே எடும் ஒரு கால் கடிதாசி!

காரியதரிசி :—எதற்காக யுவர் எக்ஸலென்ஸி?

வேவல் :—எதற்காகவா? எல்லாம் இந்தப் பாழும் வேலைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டுப் போவதற்குத் தான்.

காரியதரிசி :—அப்படி முழுக்குப் போட்டு விட்டுப் போகும்படியாக என்ன ஆபத்து வந்து விட்டது. யுவர் எக்ஸலென்ஸி?

வேவல் :—இன்னும் என்ன ஆபத்து வர வேண்டும்? சமீபத்தில் என் குட்டு வெளிப்பட்டு விட்டதே, அது போதாதா?

காரியதரிசி :—என்ன குட்டு வெளிப்பட்டது யுவர் எக்ஸலென்ஸி?

வேவல்:—ஓ மை லார்ட்! இப்படிப்பட்ட காரிய தரிசிகளை வைத்துக் கொண்டு நான் குட்டிச்சுவராகப் போனாற் போலத்தான்! என்ன ஐயா, காந்திக்கும், எனக்கும் சமீபத்தில் நடந்த கடிதப் போக்குவரத்தைச் சரியாகப் பதினெட்டாம் தேதி யன்று பிரசுரம் செய்யச் சொன்னேனா?

காரியதரிசி:—ஆம். சொன்னீர்கள், யுவர் எக்ஸலென்ஸி!

வேவல்:—எதற்காகச் சரியாகப் பதினெட்டாம் தேதி பார்த்து கடிதப் போக்கு வரத்தை வெளியிட்டேன்?

காரியதரிசி:—பத்தொன்பதாம் தேதி காந்திஜியும் ஜின்னாவும் கூடிப் பேசப் போவதாக இருந்ததால் பதினெட்டாம் தேதி பார்த்து வெளியிட்டீர்கள்.

வேவல்:—ஆனால் கூடிப் பேசினார்களோ?

காரியதரிசி:—இல்லை.

வேவல்:—ஏன் இல்லை? ஏன்?

காரியதரிசி:—அதுதான் அந்தப் பாழும் ஜுரம் ஜின்னாவைப் பிடித்துக் கொண்டு விட்டதே?

வேவல்:—ஜுரம் ஜின்னாவைப் பிடிக்கப் போக எனக்கு எவ்வளவு அவமானமாகப் போய்விட்டது பாரும்! நான் கடிதப் போக்கு வரத்தைப் பதினெட்டாம் தேதி வெளியிட்டது பலன் இல்லாமல் அல்லவா போய் விட்டது! உம்மை என் காரியதரிசி என்று வைத்துக் கொண்டு என்ன பலன்? சட்! சட்! சட்! ஓ! ஓ! ஓ! தூ! தூ! தூ!

[ *வைஸராய் வேவல் சடாரென்று நிற்கிறார். பின்னால் கவாத்து நடையில் வரும் காரியதரிசி அவர்மீது முட்டிக் கொள்கிறார்.* ]

**காரியதரிசி :**—என்னை என்ன பண்ணச் சொல்கிறீர்கள், யுவர் எக்ஸலென்ஸி !

**வேவல் :**—என்ன பண்ணுகிறதா ? இத்தனை பெரிய தேசத்துக்கு நாம் ஒரு வைஸராய், நீர் நமக்கு ஒரு காரிய தரிசி என்று இருந்து கொண்டு என்ன பண்ணுகிறதா ? இந்தத் தலைவர்களில் யாருக்கு என்ன ஜுரம் வந்தாலும் நம்மைக் கேட்டுக் கொண்டுதான் வரவேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம் போட்டு வைப்பதற்கென்ன ? இம்மாதி ஒரு சட்டம் முன்னமேயே போட்டிருந்தால் இந்த காந்திக்கும் மலேரியா ஜுரம் வந்திருக்குமா ? அவரும்தான் இப்படிக் கடிதம் எழுதி, எழுதி என்னைத் திகைக்க அடித்துக் கொண்டிருப்பாரா ?

**காரியதரிசி :**—சரி, இதோ போய் ஒரு அவசரச் சட்டம் தயாரித்துக் கொண்டு வருகிறேன்.

**வேவல் :**—சரி, உடனேயே தயாரியும். இந்தியாவில் உள்ள எல்லா வியாதிகளும் உடனேயே லைசென்சு பெற்றுக்கொள்ள வேண்டும். யாராவது அரசியல் தலைவர்களைப் பிடிப்பதாயிருந்தால் நமக்கு ஒரு மாதத்துக்கு முன்பே அறிவிப்பு செய்ய வேண்டும். இந்த அறிவிப்பின் நகல் ஒன்று வியாதிகள் கன்ட்ரோலருக்கு அனுப்பப்பட வேண்டும். ஏன், இன்னும் நின்று கொண்டிருக்கிறீர் ? போம். சட் ! சட் ! சட் ! சீ ! சீ ! சீ ! தா ! தா ! தா !

# நான் சர்வாதிகாரியானல்!

அது என்னமோ தெரிய வில்லை, நான் சர்வாதிகாரி யானல் என்ன பண்ணுவேன் என்பதைத் தெரிந்து கொள்ள, என் பள்ளிக்கூடத்து நாட்களிலிருந்தே எல்லா ரும் வெகு ஆவலாக இருந்து வருகிறார்கள்.

நான் எட்டாவது வகுப்புக்கு வரும்வரை, எந்த வாத்தியாரும் எந்த விஷயத்தைப் பற்றியும் என் மேன்மை யான அபிப்பிராயத்தையோ, அல்லது என் உயர்ந்த யோசனையையோ கேட்டதில்லை. ஏழாவது வகுப்பு முடிய ஈரேழு உபாத்தியாயர்களை நான் பார்த்திருக்கிறேன். (ஒரு வகுப்புக்கு ஒரு வகுப்பு வாத்தியார் வீதம் ஏழு வாத்தியார்கள்தானே, ஈரேழு எப்படி ஆகும் என்று கேட்டு என் மானத்தை வாங்காதீர்கள். வகுப்புக்கு இரண்டு வருஷம், ஒவ்வொரு வருஷமும் ஒரு பள்ளிக் கூடம் என்று வைத்தால் ஈரேழு உபாத்தியாயர்கள் ஆக வில்லையா?)

இந்த ஈரேழு உபாத்தியாயர்களும் தங்கள் தங்கள் காரியங்களைத் தாங்களே யோசனை செய்து முடிவுக்கு வந்தார்கள் என்று நினைக்கிறேன்.

ஏனெனில், "ஏன் பாடம் படிக்கவில்லை?" "ஏன் பள்ளிக்கூடத்துக்கு நாழி கழித்து வந்தாய்?" "பக்கத்துப் பையனோடு ஏன் சண்டை போட்டாய்?" ஆகிய இவற்

றைத் தவிர இந்த வாத்தியார்கள் எங்களை வேறு ஒன்றும் கேட்பதில்லை.

ஆனால் எட்டாவது வகுப்பு உபாத்தியாயருக்கு அப்படி யில்லை. எத்தனையோ விஷயங்களைப்பற்றி அவருக்கு ஒரு திட்டமான அபிப்பிராயமோ, யோசனையோ இருந்ததாகத் தெரிய வில்லை. உதாரணமாக கிராம வாழ்க்கை சிறந்ததா, நகர வாழ்க்கை சிறந்ததா என்கிற விஷயத்தைப் பற்றி அவருக்குத் தாமாகவே யோசனை பண்ணி ஒரு முடிவுக்கு வரத் தெரியவில்லை. மாணவர்களாகிய எங்களைக் கேட்காமல் முடியாதுபோல் பட்டது. இருந்தாலும் நேரிடையாக எங்களைக் கேட்கலாமா? அவமானமாக இருக்காதா? அதற்காக அவர் ஒரு யுக்தி செய்தார். 'மாணவர் விவாத சங்கம்' என்று ஒரு சங்கம் ஏற்படுத்தி அதில் எங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கச் சொன்னார்.

உபாத்தியாயர்கள் இத்தனை ஆவலாக நம் உதவியைக் கோரும்போது மாட்டேன் என்று சொல்லலாமா? அதற்காக என் மாமாவைக் கேட்டு எது சிறந்தது என்பதைப் பற்றி ஒரு வியாசம் எழுதித் தரச் சொன்னேன். அவர் எழுதிக் கொடுத்ததை அப்படியே நெட்டுருப்பண்ணி மாணவர் விவாத சங்கத்தில் தடங்கலின்றி ஒப்பித்து விட்டேன்.

ஆனால் எட்டாவது வகுப்பு உபாத்தியாயர் என்னை இத்துடன் விட்டுவிட வில்லை. இன்னும் கொஞ்சம் நாள் கழித்து, " எது பலம் வாய்ந்தது, பேனவா, கத்தியா? " என்று கேட்டார்.

இது விஷயத்தையும் என் மாமாவைக் கொண்டே எழுதித் தாச் சொல்லி நெட்டுருப் பண்ணி ஒப்பித்தேன். ஆனால் உபாத்தியாயர் இத்தோடு விட்டாரா? இல்லை. திரும்பவும் இன்னொரு விஷயத்தைப் பற்றி என் அபிப்பிரா யத்தைக் கேட்டார்.

இப்படியாகத்தானே "தூக்குத் தண்டனை வேண்டுமா, வேண்டாமா?" "பால்ய விவாகம் நல்லதா, கெடுதலா?" "வக்கீல் வேலை உயர்ந்ததா, வைத்தியர் வேலை உயர்ந்ததா?" "குடுமி நல்லதா, கிராப்பு நல்லதா?" "பெண்கள் படிக்கலாமா, கூடாதா?" "புலால் உணவு அவசியமா, இல்லையா?" என்பது போன்ற எத்தனையோ விஷயங்களைப்பற்றி என் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டே வந்தார். நானும் என் மாமாவின் அபிப்பிரா யத்தை என் அபிப்பிராயம்போல் நெட்டுருப் பண்ணி ஒப்பித்துக் கொண்டே வந்தேன்.

ஆனால் நெட்டுருப்பண்ணும் சங்கடம் சகிக்க முடிய வில்லை. இதனால் இந்த எட்டாவது வகுப்பு எப்பத் தொலையும் என்றுகூடத் தோன்ற ஆரம்பித்து விட்டது. இந்தச் சங்கடத்திலிருந்து எப்படியாவது தப்பித்துக் கொண்டுதான் மறுகாரியம் என்று என் பள்ளிக்கூடத்துப் பாடங்களை வெகு மும்முரமாகப் படித்தேன். எப்படியோ, செத்தேன், பிழைத்தேன் என்று முதல் வருஷத்திலேயே பரீட்சையில் தேறி, ஒன்பதாவது வகுப்புக்கு வந்தேன்.

ஆனால் காசிக்குப் போயும் கர்மம் தீரவில்லை என்பது போல் ஒன்பதாம் வகுப்பு உபாத்தியாயரும் என்னையே யோசனை கேட்க ஆரம்பித்து விட்டார்!

இதில் இன்னெரு ஆச்சரியம் என்னவென்ருல், எட்டாவது வகுப்பு உபாத்தியாயருக்கு ஏற்பட்ட அதே சந்தேகம்தான் இவருக்கும் தோன்றி விட்டது!

ஆனுல் இந்தக் கேள்விகளுக்கெல்லாம் நான் பதில் சொல்ல அஞ்ச வில்லை. வாத்தியார் எதிர்பார்த்தது எல்லாம் நான் யாரையாவது கேட்டு, எழுதி நெட்டுருப் பண்ணி ஒப்பிவிக்க வேண்டும் என்பதுதானே?

ஆனுல் என் விஷயத்தில் ஒரு தர்ம சங்கடம் ஏற்பட்டு விட்டது. மாமா வேலை மாற்றலாகி வேறு ஊருக்குப் போய் விட்ட படியால் எங்கள் அத்திம்பேரைக் கொண்டு எழுதச் சொல்ல நேர்ந்தது. அவர் எங்கள் மாமா எழுதிக் கொடுத்த அபிப்பிராயங்கள் எல்லாவற்றுக்கும் மாறுத லான அபிப்பிராயம் எழுதிக் கொடுத்து விட்டார். கிராம வாழ்க்கைதான் சிறந்தது என்று எட்டாவது வகுப்பில் சொன்ன நான் நகர வாழ்க்கைதான் சிறந்தது என்று ஒன்பதாவது வகுப்பில் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ள வேண்டி வந்தது. தூக்குத் தண்டனை அவசியம் என்று முதல் வருஷத்தில் தீர்ப்புச் சொன்ன நான் அடுத்த வருஷமே, திருவாங்கூர் சமஸ்தானத்தில் சமீபத்தில் செய்திருப்பதுபோல், தூக்குத் தண்டனை வேண்டாம் என்று அதை ரத்துச் செய்ய நேர்ந்தது!

நான் ஒன்பதாவது வகுப்பில் இப்படிப் பேசியதை யெல்லாம் எட்டாவது வகுப்பு வாத்தியாரும் கேட்டுக் கொண்டிருந்தார். நான் பேசியதைக் கேட்டு அவ்வப் பொழுது சிரிக்கவும் செய்தார். நான் மிகவும் நன்ருகப் பேசினேன் என்று சிரித்தாரா, அல்லது முன்னுக்குப் பின்

முரணாகப் பேசுகிறேனே என்று சிரித்தாரா என்பது அவருக்குத்தான் வெளிச்சம்!

ஆனால் ஒன்பதாவது வகுப்போடேயாவது இந்தத் தொல்லை என்னை விட்டதா? இல்லை. பத்தாவது வகுப்புக்கும் என்னைத் தொடர்ந்து வந்தது. அந்த வாத்தியாருக்கும் இதே சந்தேகங்கள். இந்தத் தடவை இவற்றை எழுதிக் கொடுக்க மாமாவும் இல்லை, அத்திம்பேரும் இல்லை. நானே தான் கக்கே, பிக்கே என்று எழுதி ஒப்பித்து அவமானப் பட நேர்ந்தது.

கடைசியில் பத்தாவது வகுப்பு முடிந்து காலேஜில் சேர்ந்தேன். அங்கேயும் இதே தொல்லைதான். ஆனால் இங்கே ஒரே ஒரு கேள்வியைத்தான் திரும்பத் திரும்ப என்னைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். நான் சர்வாதி காரியானால் என்ன பண்ணுவேன் என்பதுதான் அக் கேள்வி. இக்கேள்விக்கு நான் அப்பொழுது சொன்ன பதில்களை இப்பொழுது நினைத்துக் கொண்டாலும் சிரிப்பு வருகிறது.

நான் சொன்ன பதில்கள் வருஷத்துக்கு வருஷம் மாறிக் கொண்டே வந்தன.

முதல் வருஷம், இந்த மாதிரி மாணவர் சங்கம் என்று ஒன்று வைத்து, மாணவர்களின் கழுத்தை அறுக்கும் இந்த வழக்கத்தின் மீது எனக்கு இருந்த கோபம் சொல்லி முடியாது. ஆகவே, "நான் சர்வாதிகாரியானால் இந்த மாணவர் சங்கங்களை ஒழித்து விடுவேன்" என்று சொன்னேன்.

இரண்டாவது வருஷம் பரீட்சைக்கு வெகு மும்முரமாகப் படித்துக் கொண்டிருந்தேன். ஆனால், பரீட்சைகளின்மீது இருந்த கோபம் சொல்லி முடியாது. ஆகவே, "நான் சர்வாதிகாரியானால் பரீட்சைகளை ஒழித்து விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பேன்" என்றேன். இந்த பயமுறுத்தலைக் கண்டு பயந்துதானோ என்னவோ, பரீட்சை அதிகாரிகள் அந்த வருஷம் எனக்குப் 'பாஸ்' கொடுத்து விட்டனர்.

மூன்றாவது வருஷம் என் கல்யாணத்துக்காக என் பெற்றோர்கள் வெகு மும்முரமான ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள். எத்தனையோ பெண்களை நான் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பினேன். ஆனால், ஒரு இடத்திலாவது எனக்குக் கல்யாணம் நிச்சயமாகவில்லை. காரணம் என் பெற்றோர்கள் ஏகத்தாராக வரதட்சணை கேட்டதுதான்.

ஆகவே வரதட்சணை வாங்கும் வழக்கத்தின் மீது எனக்கு இருந்த கோபம் சொல்லி முடியாது. அந்த வருஷ மாணவர் சங்கத்தில், "நான் சர்வாதிகாரியானால் வரதட்சணை வாங்கும் கிராதகர்களையெல்லாம் கழுவிலேற்றி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பேன்" என்று கர்ஜித்தேன். இந்த விஷயமாக என் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருந்த உணர்ச்சிகளையெல்லாம் வெளியே கொட்டினேன். இந்த கர்ஜனையைப் பள்ளிக்கூடத்து மாணவர்கள், உபாத்தியாயர்கள் எல்லாரும் வெகுவாகச் சிலாகித்தார்கள்.

இப்படியாகத்தானே நான் சர்வாதிகாரியானல் என்ன பண்ணுவேன் என்பதைப் பற்றி என் கருத்து வருஷத்துக்கு வருஷம் மாறிக்கொண்டே வந்தது.

குமாஸ்தா வேலைப் பயிற்சிக்காக டைப் அடிக்கவும், சுருக்கெழுத்து எழுதவும் கற்றுக்கொள்ள வேண்டியிருந்த போது, நான் சர்வாதிகாரியானல் அவற்றை ஒழித்து விட்டுத்தான் மறுகாரியம் என்று தீர்மானம் பண்ணி யிருக்கிறேன்.

இப்படியாக என் எண்ணங்கள் மாறிக்கொண்டே வந்தன. கடைசியில் எழுத்தாளனுக மாறினேன். பேனுவைப் பிடித்து முதல் கட்டுரை எழுதி அது பிரசுரம் ஆனதுதான் தாமதம், என் எண்ணங்கள் எல்லாம் சடா ரென்று மாறின.

இப்பொழுது நான் சர்வாதிகாரியானல் முன்னே சொன்ன ஒரு காரியத்தையும் செய்ய மாட்டேன். பரீட்சை விஷயம் நாசமாகப் போகட்டும், எனக்குக் கவலையில்லை! வரதட்சணை விஷயம் எக்கேடு கெட்டுப் போகட்டும்—அதாவது நான் என் ஐந்து மாதப் பெண் அனுவுக்கு (அனுராதாவைத்தான் நாங்கள் அனு என்று கூப்பிடுகிறோம்.) வரதட்சணை கொடுக்க வேண்டிய நிர்ப் பந்தம் நேரிடும் வரையில், அதைப் பற்றியும் கவலை இல்லை.

சரி, நான் இப்பொழுது சர்வாதிகாரியானல் என்ன செய்வேன் தெரியுமா? சற்றுப் பொறுமையுடன் இருங்கள்.

* * *

நான் சர்வாதிகாரியானால் என்ன பண்ணுவேன் என்று தெரிந்து கொள்வதற்கு, நான் யார் என்று நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

## நான் ஒரு எழுத்தாளன்

எழுத்தாளன் என்றதும், எழுத்தாளன் யார், அவன் இலட்சணங்கள் என்னென்ன என்ற பிரச்னை எழுகிறது.

இதுவரை யாரும் இந்தக் கேள்விக்குச் சரியான பதில் அளித்ததாகத் தெரியவில்லை. எழுத்தாளர் மகாநாடு கூட்டுகிறவர்களும், எழுத்தாளர் சங்கங்கள் ஏற்படுத்துகிறவர்களும்கூடச் சரியான பதில் வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

கந்தலைக் கட்டிக்கொண்டு, எலும்புந் தோலுமாக இருக்கிறவர்கள்தான் எழுத்தாளர்கள் என்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள். ஒருவன் எவ்வளவுக் கெவ்வளவு கந்தலைக் கட்டிக் கொண்டிருக்கிறானோ, அவ்வளவுக் கவ்வளவு பெரிய எழுத்தாளன் என்பது இவர்கள் சித்தாந்தம். இவர்களிடம் பெரிய எழுத்தாளன் என்று பெயர் வாங்குவதற்காக நானும் கந்தலைக் கட்டிக்கொண்டு நிற்கத் தயார்தான். ஆனால் சரசு வீட்டில் ஒரு கந்தலையாவது விட்டு வைத்தால்தானே! எல்லாவற்றையுந்தான் என் பெண் அனுவின் உபயோகத்துக்காக எடுத்துக்கொண்டு விட்டாளே!

இன்னொரு சாரார் இருக்கிறார்கள். இவர்கள் கணக்குப்படி ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் புகையிலைக்குக் குறையாமல் மென்று விழுங்குகிறவர்கள் தான் எழுத்தாளர்கள்.

இத்தகைய எழுத்தாளர்கள் கையில் எப்பொழுது பார்த்தாலும் வெற்றிலை பாக்கு டப்பா விளங்கிக் கொண்டிருக்கும். இவர்கள் எப்பொழுது பார்த்தாலும் வாயில் புகையிலை அடக்கிக் கொண்டிருப்பார்களாதலால் யாருடனும் அதிகமாய்ப் பேசமாட்டார்கள். அப்படி பேசினாலும், 'வழா, வழா, குழ, குழா' பாஷையில்தான் பேசுவார்களாதலால் இவர்கள் பேசுவது யாருக்கும் புரியாது.

சிலர் தங்களைத் தாங்களே எழுத்தாளர்கள் என்று காட்டிக் கொள்வதற்காக ஒரு யுக்தி கையாளுகிறார்கள். இந்த நக்கீரர்கள் எப்பொழுது பார்த்தாலும் பிறர் எழுதும் எழுத்தில் ஏதாவது குறை கண்டு பிடித்துக்கொண்டே இருப்பார்கள். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகக் குறைகள் கண்டு பிடிக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு தாங்கள் பெரிய எழுத்தாளர்கள் என்பது இவர்கள் எண்ணம்!

ஆனால் என்னைக் கேட்டால், ஒருவன் எழுத்தாளனா, இல்லையா என்று கண்டு பிடிப்பதற்கு அவனுக்குப் பின் கண்ட குணம் இருக்கிறதா, இல்லையா என்று பார்ப்பது தான் என்பேன்.

உண்மையான எழுத்தாளனுக்கு அவனை என்ன வைதாலும், திட்டினாலும் கோபம் வராது. ஆனால் அவன் எழுத்தைப் பற்றி ஏதாவது குறை கூறி விட்டோமோ கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான். அதே மாதிரி அவனை என்ன புகழ்ந்தாலும், தூக்கி வைத்தாலும் மசியமாட்டான். 'இந்திரனே சந்திரனே' என்று சொன்னாலும்கூட ஏமாற மாட்டான்.

ஆனால் அவன் எழுத்தைப் புகழ ஆரம்பித்தாலோ உடனே நம்மைக் கட்டிப் பிடித்து ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு விடுவான். நாம் பிறகு அவனை எப்படி ஆட்டிவைத்தாலும் அதன்படி ஆடுவான்.

உண்மையான எழுத்தாளனுக்கு இருக்க வேண்டிய இந்தக் குணம் எனக்கு அதிகம் இருப்பதால் நான் சர்வாதிகாரியானால் என்ன பண்ணுவேன் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

முதல் காரியமாக என் மாமனாரை இந்த நாட்டுக்கு வைஸராயாக நியமித்து விடுவேன்.

நான் சரசுவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முன்னரே, எனக்கு என் மாமனார் சிநேகமாகி விட்டார். நான் சரசுவை வரதட்சணை வாங்காமல் கல்யாணம் பண்ணிக்கொள்வதற்காகத் தானோ, அல்லது எனக்கு ஊக்க மூட்டுவதற்குத்தானோ எப்பொழுது பார்த்தாலும் என் கட்டுரைகளைப் புகழ்ந்து கொண்டிருப்பார்.

சிலரைப் போல் படித்துப் பார்த்து விட்டுத்தான் அபிப்பிராயம் கூறவேண்டும் என்ற கட்டாயம்கூட அவர் வைத்துக் கொண்டதில்லை.

என்னைப் பார்க்கும் போதெல்லாம், "இந்த வாரம் உன் கட்டுரை பலே ஜோர்! அதைப் படித்துப் படித்து எங்கள் வீட்டில் எல்லார் வயிறும் புண்ணாகி விட்டது" என்பார்.

அவர் இப்படிச் சொல்லுவதைக் கேட்கும் போதெல்லாம் எனக்கு உண்டாகும் சந்தோஷம் சொல்லி முடியாது.

அதிலும் சில வாரங்கள் மற்ற வாரங்களை விட சந்தோஷம் அதிகமாக இருக்கும். ஏனெனில் அந்த வாரங்களில் நான் கட்டுரையே எழுதியிருக்க மாட்டேன்! எழுதாத கட்டுரையையே இவ்வளவு அதிகமாகப் புகழு கிறவர் எழுதின கட்டுரையாய் இருந்தால் எவ்வளவு புகழ மாட்டார் என்று சந்தோஷப்படுவேன்.

ஆகவே நான் இந்தியாவுக்கு சர்வாதிகாரியானதும் முதல் முதல் காரியமாக என் மாமனாரை இத்தேசத்தின் வைஸராயாக ஆக்கி விடுவேன். [என்ன மாமனார் ஸ்வாமி! முடியாதா?.....................அதெல்லாம் முடியாது. கட்டாய மாகத் தங்களை வைஸராயாக ஆக்கிவிட்டுத்தான் மறு வேலை.]

அடுத்தபடியாகக் கவர்னர்கள் பொறுக்க வேண்டு மல்லவா? அதற்காக வைஸராய் அகில இந்தியப் போட் டிப் பரீட்சை ஒன்று வைப்பார். என் எழுத்தின் அருமை பெருமைகளைப் பற்றி யார் அதிகமாகவும், அழகாகவும் வர்ணிக்கிறார்களோ, அவர்களுக்குக் கவர்னர் பதவி அளிக் கப்படும்.

இதே ரீதியில் மற்ற கலெக்டர் முதலிய வேலைகளும் கொடுக்கப்படும்.

சர்க்கார் சிப்பந்திகள் எல்லாம் தங்கள் வேலை உயர் வதற்காக, முன் காலத்தைப் போல், வேலையைச் சிரத்தை யாகச் செய்ய வேண்டும் என்கிற அவசியமில்லை. இல்லை, தற்காலத்தைப்போல் டின்னர் பார்ட்டிகள் கொடுக்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. எப்பொழுது

பார்த்தாலும் என் எழுத்துக்களைப் புகழ்ந்து கொண்டிருந் தால் போதும். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகப் புகழ்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு உத்தியோகம் உயரும். எவ்வளவுக் கெவ்வளவு குறைவாகப் புகழ்கிறார் களோ, அவ்வளவுக் கவ்வளவு உத்தியோகம் தாழும்.

சரி, என் கட்டுரைகளைக் குறைகூறுகிறவர்களின் கதி என்ன? சந்தேகமென்ன? அதோகதிதான்!

வைஸராய் தாம் உத்தியோகம் ஏற்றுக்கொண்ட அன்றே, முதல் முதல் காரியமாக, நாடோடித் தற்காப்புச் சட்டம் என்று ஒரு சட்டம் இயற்றுவார்.

இந்தச் சட்டத்தின்கீழ், என் கட்டுரைகளைக் குறை வாகக் கூறினதாகவோ, அல்லது பிறரைக் குறைகூறத் தூண்டினதாகவோ, அல்லது பிறர் குறை கூறும்போது பக்கத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்ததாகவோ, ருஜுவானாலும் சரி, அல்லது சந்தேகப்பட்டாலும் சரி, உடனே கைது செய்யப்பட்டு, ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனையோ, அல்லது ஐம்பதினாயிரம் ரூபாய் அபராதமோ, அல்லது இரண்டுமோ விதிக்கப்படுவார்கள். கால வரையறையின்றிக் காவலில் வைப்பதற்கும் கவர்னர் களுக்கு விசேஷாதிகாரங்கள் அளிக்கப்படும்.

(என்ன அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர்! எதற் காகச் சிரிக்கிறீர்?.......இருக்கட்டும். என் கட்டுரைகளைப் பற்றிக் குறைவாகவா பேசிக் கொண்டிருக்கிறீர்? இருக் கட்டும். நான் சர்வாதிகாரி யாகட்டும். அப்பொழுது பார்த்துக் கொள்ளுகிறேன் உம்மை!)

நாடோடித் தற்காப்புச் சட்டத்துக்கு அடுத்தபடியாகத் தினம் ஒரு அவசரச் சட்டம் வைஸராய் மாளிகையிலிருந்து பிறந்துகொண்டே யிருக்கும்.

பள்ளிக்கூடங்களில் எல்லாம் என் புஸ்தகங்களைக் கட்டாயப் பாடமாக வைக்கவேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! நான் எழுதியதை எல்லாரும் நெட்டுருப் பண்ணி ஒப்பிக்க வேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! தெருவில் போகும்போது எல்லார் கையிலும் என் புஸ்தகம் ஏதாவதொன்று விளங்க வேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்! இரவில் எல்லாரும் என் புஸ்தகங்களைப் பாராயணம் பண்ணவேண்டும் என்று ஒரு அவசரச் சட்டம்!

இப்படியாகத் தானே அவசரச் சட்டங்கள் கணக்கு வழக்கின்றி அவசரம் அவசரமாக வெளிவந்து கொண்டிருக்கும். அவசரச் சட்டங்கள் போடுவதில் தங்களுக்கு ஈடு, இணையில்லை என்று நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கும் நம் பிரிட்டிஷ் சர்க்கார்கூட, இதைக் கண்டு வெட்கித் தலைகுனிய வேண்டியதுதான்.

ஆனால் அவசரச் சட்டங்கள் இயற்றுவதில் என் மாமனார் கெட்டிக்காரர்தானா என்று எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. ஏனெனில் எங்கள் மாமனார் வீட்டில் அவசரச் சட்டங்கள் போடுவதெல்லாம் என் மாமனார் அல்ல. பின், யாராம்?............ஊஹும். அதை நான் சொல்லி என் காப்பி வாயில் மண்ணைப் போட்டுக்கொள்ள விரும்பவில்லை. மாமனார் வீட்டுக்குப் போகும்போதெல்லாம் எனக்கு மாமனாரா அடுப்பு மூட்டி, காப்பி போட்டுக் கொடுக்கிறார்?

இருந்தாலும் இதற்காக மாமனாரைக் கைவிட்டு விடலாமா? பிரிட்டிஷ் சர்க்காராய் இருந்தால் அவசரச் சட்டங்கள் போடத் தெரியாதவரை வைஸ்ராய் மாளிகை இருக்கும் திக்கு நோக்கிப் பார்க்கக்கூட விடமாட்டார்கள்.

ஆனால் நான் இதற்காக என் மாமனாரைக் கை விட்டு விடப் போவதில்லை. தற்சமயம் என் மாமனார் வீட்டில் அவசரச் சட்டங்கள் அவசரம் அவசரமாகப் போட்டுக் கொண்டிருக்கும் நபரையே அவசரச் சட்ட இலாகா மந்திரியாக ஆக்கிவிடப் போகிறேன். உத்தியோகத்துக்குச் சரியான நபராச்சு, ஸ்திரீகளுக்கு என் அரசாங்கத்தில் பிரதிநிதித்வம் கொடுத்த மாதிரியுமாச்சு! சம உரிமைக்கட்சி பேசும் ஸ்திரீகளுக்கு ஒரு நல்ல பதிலாச்சு!

நான் சர்வாதிகாரியானால் நிறைவேற்றுவதற்காக இதைப் போல இன்னும் எவ்வளவோ நல்ல யோசனைகள் வைத்திருக்கிறேன். ஆனால் எனக்குச் சர்வாதிகாரிகளாக வாய்த்திருக்கும் சரசுவும், என் பெண் அனுவும் என்னை மேலே எழுத விடமாட்டார்கள் போல் தோன்றுகிறது. என் ஐந்து மாதப் பெண் அனு ஐந்து நிமிஷமாக 'ஹோ' என்று அலறிக் கொண்டிருக்கிறாள். "உங்களைத்தானே! குழந்தையைக் கொஞ்சம் தூக்கி வைத்துக் கொண்டால் என்ன?" என்று சரசு கதறிக் கொண்டிருக்கிறாள். ஆகவே நான் செய்யப்போகும் இன்னும் ஒரே ஒரு காரியத்தை மட்டும் சொல்லி விட்டு நிறுத்திக் கொள்கிறேன்.

நியாயஸ்தலங்களில் சிறு குற்றங்களுக்கு அபராதம் விதிக்கும் வழக்கத்தை நிறுத்தி விடுவேன். அதற்குப் பதில்

என் கட்டுரை ஏதாவதொன்றை எடுத்துக் கொடுத்து, அதை நூறு தடவை இம்போசிஷன் எழுது என்று தண்டனை விதிப்பேன்.

ஆகவே, இப்பொழுதே சொல்லி விட்டேன்; ஜாக்கிரதை! என்னை சர்வாதிகாரி யாக்கி விடாதீர்கள்!

# ஹிட்லர் தர்பார்

ஹிட்லர் :—மந்திரி கெயரிங்! நம் நாட்டில் குடி மக்கள் எல்லாரும் வழக்கம்போல் வறுமையால் வாடிக் கொண்டிருக்கின்றனரா?

கெயரிங் :—வாடிக் கொண்டிருக்கின்றனர், பிரபோ!

ஹிட்லர் :—நம் எதிரிகள் வார மும்மாரி குண்டு மழை பொழிந்து கொண்டிருக்கின்றனரா?

கெயரிங் :—பொழிந்து கொண்டிருக்கின்றனர், பிரபோ!

ஹிட்லர் :—குடிகள் ஆறில் ஒரு பங்கைத் தாங்கள் வைத்துக் கொண்டு, மீதியை நமக்குச் செலுத்திக் கொண்டு வருகின்றனரா?

கெயரிங் :—செலுத்திக் கொண்டு வருகின்றனர், பிரபோ!

ஹிட்லர் :—தேவாலயங்களில் எல்லாம் முறை தவறாமல் ஆயுத உற்பத்தி நடந்து கொண்டிருக்கிறதா?

கெயரிங் :—நடந்து கொண்டிருக்கிறது, பிரபோ!

ஹிட்லர் :—குடி மக்கள் எல்லாம் வாயார நம்மை வைது கொண்டிருக்கின்றனரா?

கெயரிங் :—வைது கொண்டிருக்கின்றனர், பிரபோ!

ஹிட்லர் :—சரி, மிகவும் சந்தோஷம்; கிழக்குப் போர் முனையிலிருந்து நமக்கு ஏதாவது செய்திகள் உண்டா?

கேயரிங் :—கிழக்குப் போர்முனையி லிருந்து இப்பொழுதுதான் ஒரு நல்ல செய்தி கிடைத்தது, பிரபோ!

ஹிட்லர் :—நல்ல செய்தியா? நம்ப முடியவில்லையே! இதில் ஏதோ சூது இருக்க வேண்டும். என்ன ஹெர் கெயரிங்? உண்மையிலேயே அது நல்ல செய்திதானா?

கேயரிங் :—ஆமாம், பிரபோ!

ஹிட்லர்:—அப்படியானால் அது என்னவென்று நம்மிடம் தெரிவிக்கலாமா?

கேயரிங் :—அதற்கு என்ன ஆட்சேபனை, பிரபோ! கிழக்குப் போர்முனையே தங்களை நாடித் துரிதமாக வந்து கொண்டிருக்கிறது. அதுதான் இப்பொழுது கிடைத்த நல்ல செய்தி, பிரபோ!

ஹிட்லர் :—கிழக்குப் போர்முனையா? நம்மை நாடியா? எதற்காக?

கேயரிங் :—தங்களுக்கு அதிகக் கஷ்டம் கொடுக்கக் கூடாது என்றுதான், பிரபோ! யுத்த முனையிலிருந்து வெற்றிகரமாகப் பின்னேக்கி முன்னேறிக் கொண்டிருக்கும் நம் யுத்த வீரர்களைப் பார்ப்பதற்காகத் தாங்கள் அடிக்கடி போர் முனைக்குப் போக வேண்டி யிருக்கிறதல்லவா? போர்முனை வெகு தூரத்தில் இருந்தால் தங்களுக்குக் கஷ்டமாக இராதா? அதற்காகப் போர்முனையே தங்கள் மீது இரக்கம் கொண்டு தங்களை நாடி வந்து கொண்டிருக்கிறது.

ஹிட்லர் :—சபாஷ்! நம்மீது இக் கிழக்குப் போர் முனை கொண்டுள்ள விசுவாசத்துக்காக மெச்சினோம்! அதற்காக நாளைக்கு நம் உயிரை விடுவதாய் இருந்தால் அந்தப் போர்முனையிலேயே விட விரும்புகிறோம். ஆனால் அந்த மேற்குப் போர்முனையின் விஷயம் என்ன? அது இன்னும் நம்மை நாடி வந்ததாகத் தெரியவில்லையே!

கேயரிங் :—எது என்ன இருந்தாலும் அந்தக் கிழக்குப் போர்முனைக்குத் தங்களிடம் உள்ள விசுவாசம் அந்த மேற்குப் போர் முனைக்குக் கிடையாது. இத்தனை நாளாக அது நின்ற இடத்தை விட்டுத் துளியாவது அசைந்ததா, பாருங்கள்! இப்பொழுது தானே கொஞ்ச நாளாக நகர ஆரம்பித்திருக்கிறது!

ஹிட்லர் :—அப்படியானால் அதிதி உபசாரத்திற் கென்றே நாம் தயாரித்து வைத்திருக்கும் வி-1, வி-2 போன்ற இரகசிய ஆயுதங்களை இனி அவ்விசுவாசம் கெட்ட மேற்குப் போர்முனைக்கே அனுப்பி வையுங்கள். அப்போது தான் அதற்குப் புத்தி வந்து சீக்கிரம் நம்மிடம்வந்து சேரும். சரி, சபை கலையலாம்! ஹெய்ல் ஹிட்லர்!

# உங்கள் சம்பளம் என்னவோ!

அது என்னமோ தெரியவில்லை, உலகம் முழுவதும் என் சம்பளம் என்னவென்று தெரிந்து கொள்வதில் பெரும் ஆவலாக இருப்பதாகத் தெரிகிறது. "என் சம்பளம் என்னவா யிருந்தால் இவர்களுக்கென்ன? என் குடித்தன நிர்வாகத்தை இவர்களா ஏற்று நடத்தப் போகிறார்கள்?" என்று "இவர்கள்" காதில் விழும்படி நானும் எத்தனையோ தடவைகள் சொல்லியாகி விட்டது. இருந்தாலும் "இவர்கள்" என்னை விடுவதாயில்லை.

முன் காலமாய் இருந்தால், "ஏன் ஸார், உங்களைத் தானே! எங்கே வேலையாய் இருக்கிறீர்கள்? உங்கள் சம்பளம் என்ன? மேல் வரும்படிக்கு ஏதாவது வழி உண்டா?" என்று 'டப், டப்' பென்று வெளிப்படையாகக் கேட்டு விடுவார்கள். நாமும் ஆளுக்கேற்றுப்போல் 'டப், டப்' பென்று பதில் அளித்து விடுவோம்.

ஆனால் இப்பொழுதெல்லாம் நாகரிகம் அதிக மாகிக் கொண்டு வருகிறதல்லவா? அதனால் ஒருவரை யொருவர் சம்பளம் என்னவென்று விசாரித்துத் தெரிந்து கொள்வது அநாகரிகம் என்று கருதப்படுகிறது. ஆனால், நேரிடையாகக் கேட்பது மட்டும் அநாகரிகம் என்று கருதப்படுகிறதே யொழிய, மறைமுகமான வழிகளில் சம்பளத்தைத் தெரிந்து கொள்ள முயல்வது நின்றபாடில்லை.

சமீபத்தில் என் நண்பர்கள், நண்பர்கள் அல்லாத வர்கள் எல்லாருக்கும் நான் என்ன சம்பளம் வாங்கு கிறேன் என்று தெரிந்து கொள்ள ஆவல் அதிகமாகி விட்டது. முன்னைவிட அதிகமா, குறைச்சலா? இதை எப்படித் தெரிந்து கொள்வது? வாய்விட்டு, "உங்கள் சம்பளம் என்ன?" என்று கேட்பதோ அநாகரிகம். என்ன செய்வது?

எனவே, ஒவ்வொருவரும் ஒவ்வொரு வழியில் என் சம்பளம் என்னவென்று அறியப் பகீரதப் பிரயத்தனம் செய்துதான் வருகிறார்கள்.

சிலர் இருக்கிறார்கள். அவர்கள் நேரே நம்மை வந்து கேட்க மாட்டார்கள். ஆனல் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யரிடம் சென்று, "என்ன ஸார்! இந்தப் பயல் இத்தனை அட்டஹாசம் பண்ணுகிறானே. இவனுக்கு என்ன சம்ப ளம்? 200-ஆவது இருக்குமோ?" என்று கேட்பார்கள். அண்ணுசாமி அய்யர் என்னுடன் ரொம்ப நெருங்கிப் பழகிய போதிலும் அவருக்கும் நான் என் சம்பளத்தைச் சொன்னதில்லை.

பக்கத்து வீட்டுக்காரரானாலும் சம்பளத்தைச் சொல் லுவதில்லை என்று நான் தீர்மானம் பண்ணி யிருக்கிறேன். ஒரு தடவை, நான் இன்னொரு வீட்டில் குடி யிருந்தபோது பக்கத்து வீட்டுக்காரர் என்னை சம்பளம் என்னவென்று விசாரித்தார். தற்காலத்தில் சம்பளத்தைக் கொண்டுதான் நம் அந்தஸ்தை மதிப்பிடுகிறார்கள் அல்லவா? ஆகவே மிகப் பெருமையாக சம்பளத்தை இரட்டிப்பாகச் சொல்லி வைத்தேன். அவ்வளவுதான், வந்தது அனர்த்தம்! "என்

ஸார், இத்தனை சம்பளம் வாங்குகிறீர்களே, நான் நடத்தும் பள்ளிக்கூடத்துக்கு ஒரு ஐம்பது ரூபாய் நன்கொடை கொடுத்தால் என்ன?" என்று நோட்டுப் புஸ்தகத்தை நீட்டி விட்டார்! இதிலிருந்து நான் சம்பளத்தைப் பக்கத்து வீட்டுக்காரருக்கும் சொல்லுவதில்லை.

ஆகவே அவருக்கும் என் சம்பளம் என்னவென்று தெரியாது. இருந்தாலும் கேட்பவர்களிடம் தெரியாது என்று காட்டிக் கொள்வாரா? மாட்டார். சமயத்துக்குத் தகுந்தாற்போல் பதில் சொல்லி அனுப்புவார்.

நான் சமயம் என்று குறிப்பிடுவது அவருக்கும் எனக்கும் உள்ள உறவு அந்த சமயத்தில் இருப்பதைப்பற்றித் தான். பக்கத்துப் பக்கத்து வீட்டுக்காரர்களான படியால் எங்கள் உறவு நாளொரு தினுசும், பொழுதொரு வண்ணமுமாகத் தான் இருக்கும். ஒரு நாள் ஒரேயடியாக இழைவோம். இன்னொரு நாள் 'உம்' மென்று உம்மணா மூஞ்சிமாதிரி முகத்தை வைத்துக் கொண்டிருப்போம். நாங்கள் இழையும் நாளாயிருந்தால், "அந்தப் பயலுக்கு என்ன ஸார்! மாதம் 300, 400 சம்பாதிக்கிறான்" என்று பதில் சொல்லுவார். 'உம்' மென்று முகத்தை வைத்துக் கொண்டிருக்கும் நாளாயிருந்தால் "எல்லாம் பகட்டு ஸார்! 73 ஓ 74 ஓ தான் சம்பளம். சும்மா வீண் தடபுடல் பண்ணுகிறான்." என்பார்.

சிலர் இருக்கிறார்கள். இவர்கள் போலீஸ் இலாகாவில் இருக்க வேண்டியவர்கள், தப்பிப்போய் வேறு உத்தியோகங்களில் இருக்கிறார்கள் என்பது என் அபிப்பிராயம். துப்பறிவதில் அத்தனை கெட்டிக்காரர்கள்.

இவர்கள் நான் கட்டிக் கொண்டிருக்கும் வேஷ்டியைக் கொண்டோ, அல்லது போட்டுக் கொண்டிருக்கும் சட்டையைக் கொண்டோ என் சம்பளம் என்னவென்று கணக்குப் போட்டு விடுவார்கள்.

என்னைக் கண்டதும் இவர்கள் கேட்கும் முதல் கேள்வி, "என்ன ஸார்! நீங்கள் போட்டுக் கொண்டு இருக்கும் அங்க வஸ்திரம் ரொம்ப அழகா யிருக்கிறதே! என்ன விலையோ!" என்பதுதான்.

அங்க வஸ்திரம் ஐந்து ரூபாய் என்று சொல்லுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். உடனே நமக்குச் சம்பளம் ரூ. 50 என்று கணக்குப் போட்டு விடுவார்கள். ஏனெனில் ரூ. 100 சம்பளம் வாங்கும் அவர்கள் ரூ. 10 அங்க வஸ்திரம் அணிந்திருக்கிறார்கள் அல்லவா?

வேறு சிலர் நாம் குடி யிருக்கும் வீட்டைப் பார்த்து விட்டோ, நம் மனைவி அணியும் புடவையின் மதிப்பைக் கொண்டோ, நம் சம்பளத்தைக் கணக்கிடுவார்கள்.

இவர்கள் இதற் கென்றே ஒரு தனிக் கணக்குப் போட்டு வைத்திருக்கிறார்கள். ஒவ்வொரு ஊரிலும் வீட்டு வாடகையை எந்த எண்ணிக்கையைக் கொண்டு பெருக்கினால் சம்பளம் வரும் என்பது இவர்களுக்குத் தெரியும்.

எதிர்த்த வீட்டில் ஒருவர் இருக்கிறார். அவர் என்னைப் பார்த்துப் பேசும் போதெல்லாம் சாமான்கள் விற்கும் கிராக்கியைப் பற்றியும், குடித்தனம் நடத்த ஜனங்கள் படும் கஷ்டத்தைப் பற்றியும் தான் பேசுவார். என்னால்

கஷ்டமில்லாமல் குடித்தனம் பண்ண முடிகிறதா என்று வெகு அக்கரையாக விசாரிப்பார்.

"தேவலையே, எதிர்த்த வீட்டுக்காரர் நம்மீது இத்தனை அக்கரையாக இருக்கிறாரே" என்று நான் சந்தோஷப் படுவதுண்டு. ஆனால் இன்றுதான் தெரிகிறது அந்த மனுஷனின் தந்திரம். என் சம்பளம் என்னவென்று அறிந்து கொள்வதற்காகத்தான் அவர் ஒவ்வொரு தடவையும் குடித்தனம் நடத்த ஜனங்கள் படும் கஷ்டத் தைப் பற்றிப் பேசியிருக்கிறார். அட பாவி! இதற்காகத் தானா, நீ என்னைக் கண்டபோதெல்லாம், "ஏன் ஸார்! இந்தக் காலத்தில் ரூ. 100 யாவது இல்லாமல் குடித்தனம் பண்ண முடியுமா?" "ரூ. 150 வது இல்லாமல் குடித் தனம் பண்ண முடியுமா?" "ரூ. 200 வது இல்லாமல் குடித்தனம் பண்ண முடியுமா?" என்று எண்ணிக்கையை மாற்றி மாற்றி கேட்டுக் கொண்டே வந்தது?

நான் என் பெண்ணுக்கு என்ன வரதக்ஷிணை கொடுத் தேன் என்று மிக அக்கரையாக விசாரித்தாரே, அவர் கூட அதைக் கொண்டு என் சம்பளத்தை அறிவதற்காகத்தான் கேட்டாரோ! நான் எத்தனை ஆயிரத்துக்கு இன்ஷூர் பண்ணியிருக்கிறேன் என்று மிகப் பரிவுடன் அடிக்கடி விசாரித்துக் கொண்டிருக்கிறாரே ஒருவர், அவர் கூட அதைக் கொண்டு என் சம்பளத்தை அறிவதற்காகத் தானோ?

என்னமோ போங்கள்! இப்பொழுதெல்லாம் யார் என்னை என்ன கேள்வி கேட்டாலும் என் சம்பளத்தை அறிவதற்காகத் தான் கேட்கிறார்கள் என்று தோன்று கிறது.

இன்றைக்குப் பாருங்கள். என் பக்கத்து வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருப்பவர் என் கடைசிப் பையன் 'கான்வென்ட்'டில் வாசிக்கிருனு, அல்லது கார்ப்பொ ரேஷன் ஸ்கூலிலா என்று விசாரித்தார். அதைக் கேட்டதும் எனக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்து விட்டது. "ஏன் ஐயா! என் சம்பளம் என்ன வென்று தெரிந்து கொள்வதற் காகத்தானே இத்தனை தந்திரமாகக் கேள்வி போடுகிறீர்? உம் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது, போம்" என்று அவரை விரட்டி யடித்து விட்டேன்.

ஐயோ பாவம், அவர் தமது பையனையும் என் பைய னுடன் சேர்த்து அனுப்புவதற்காகத்தான் விசாரித்தார் என்று பின்னர் தெரிந்தது.

# டௌனிங் தெருவில்

இடம்: டௌனிங் தெரு.
பத்தாம் நம்பர் வீடு.

காலம்: சாயங்காலம்.

[ வீடு பற்றி எரிவது போல் ஒரு அறையிலிருந்து புகை வந்து கொண்டிருக்கிறது. அத்தனை சுருட்டுப் புகைக்கும் காரணமான ஸ்ரீ சர்ச்சில் அந்த அறையின் மத்தியில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். பக்கத்தில் இந்தியா மந்திரி ஸ்ரீ அமெரி காணப்படுகிறார்.]

ஸ்ரீ சர்ச்சில்:—மந்திரி! மந்திரி! மந்திரி! எங்கே நம் மதி மந்திரியைக் காணோம்!

ஸ்ரீ அமெரி:—இல்லை மகாராஜா! இதோ இருக்கிறேன். இதோ இருக்கிறேன்.

ஸ்ரீ சர்ச்சில்:—யாரை ஏமாற்றலாம் என்று பார்த்தீர்? உம் குரல் இருக்கிறதே யொழிய உடலைக் காணோமே! உடலை எங்கே விட்டு விட்டுக் குரலை மாத்திரம் எடுத்துக் கொண்டு வந்தீர்?

ஸ்ரீ அமெரி:—இல்லை மகாராஜா! உடலை எங்கேயும் விட்டு விட்டு வரவில்லை. குரல் இருக்கிற இடத்தில்தான் உடலும் இருக்கிறது!

ஸ்ரீ சர்ச்சில் :—பின் ஏன் உம் உடல் நம் கண்ணுக்குத் தெரியவில்லை?

ஸ்ரீ அமெரி :—இப்படி குபு, குபு என்று புகை விட்டுக் கொண்டிருந்தால் எப்படிக் கண் தெரியும்?

ஸ்ரீ சர்ச்சில் :—சரி, அது இருக்கட்டும் மேற்கொண்டு நம் தர்பாரை ஆரம்பிப்போம். மந்திரி!

ஸ்ரீ அமெரி :—இல்லை, மகாராஜா!

ஸ்ரீ சர்ச்சில் :—என்ன நீர் இல்லையா?

ஸ்ரீ அமெரி :—இல்லை மகாராஜா! இல்லை, இல்லை என்று சொல்லி வாயில் இல்லை யென்று வந்து விட்டது.

ஸ்ரீ சர்ச்சில் :—பரவாயில்லை, மந்திரி! நம் அருமை இந்தியா தேசத்தில் தினம் மூன்று தடவை பசிப்பிணி ஜனங்களைப் பிடித்து வாட்டுகிறதா?

ஸ்ரீ அமெரி :—வாட்டுகிறது, பிரபோ!

ஸ்ரீ சர்ச்சில் :—பசிப்பிணியால் வாடி இறந்து போனவர்களுக் கெல்லாம் வைத்திய உதவி அளிக்கப்படுகிறதா?

ஸ்ரீ அமெரி :—அளிக்கப் படுகிறது, பிரபோ!

ஸ்ரீ சர்ச்சில் :—நம் விரோதிகள் எல்லாம் சிறையில் கிடந்து வாடுகிறார்களா?

ஸ்ரீ அமெரி :—வாடுகிறார்கள், பிரபோ!

[இந்தச் சமயம் ஒரு சேவகன் அங்கு வருகிறான்.]

ஸ்ரீ சர்ச்சில் :—மந்திரி! யார் அங்கே! யாரோ ஆள் வந்து நிற்பதுபோல் சப்தம் கேட்கிறதே!

ஸ்ரீ அமெரி:—யாரப்பா அங்கே!

சேவகன்:—நான்தான் சேவகன்.

ஸ்ரீ சர்ச்சில்:—சேவகா! நீ என்னைத் தேடி வந்த காரணம் யாதோ?

சேவகன்:—மகாராஜா! நமது படைத் தலைவர் வேவல் பிரபு இக் கடிதத்தைத் தங்கள் சமூகத்தில் சமர்ப்பிக்கச் சொன்னார்.

[ஸ்ரீ சர்ச்சில் கடிதத்தைப் படித்து விட்டுத் துள்ளிக் குதிக்கிறார்.]

ஸ்ரீ சர்ச்சில்:—மந்திரி! மோசம் போய் விட்டது! நாசம் வந்து விட்டது!

ஸ்ரீ அமெரி:—நாசமா? மோசமா? ஏன் மகாராஜா! என்ன மகாராஜா!

ஸ்ரீ சர்ச்சில்:—ஏனாவது, தானாவது? அந்த காந்தியை வெளியில் விட வேண்டாம் என்று அப்பொழுதே சொன்னேன். நீர் கேட்கவில்லை. காந்தியைத்தான் வெளியில் விட்டீர், அந்த ஜின்னாவையாவது பிடித்துச் சிறையில் போட்டீரா?

ஸ்ரீ அமெரி:—ஜின்னாவையா? சிறையிலா? எதற்காக மகாராஜா? ஜின்னா நம் ஆள் அல்லவா?

ஸ்ரீ சர்ச்சில்:—நம்ப ஆள்! நீர்தான் மெச்சிக் கொள்ளணும்! இப்பொழுது ஜின்னா வெளியில் இருப்பதால் தானே காந்தி அவரைக் கண்டு பேசுகிறேன் என்கிறார்? இப்பொழுது இருக்கிற நிலையைப் பார்த்தால் இரண்டு பேரும் ஏதாவது சமாதானத்துக்கு வந்து விடுவார்

களோ என்று பயப்படுவதாக நமது வேவல் துரை எழுதி அனுப்பி யிருக்கிறார். இரண்டு பேரில் யாராவது ஒருவர், ஜின்னாவோ, காந்தியோ சிறையில் இருந்தால் இத்தகைய விபரீதம் ஏற்படுமா? இப்பொழுது என்ன சொல்கிறீர்?

[ஸ்ரீ அமெரி சிறிது நேரம் யோசித்து விட்டு ஆனந்தக் களிப்பு மெட்டில் பாட ஆரம்பிக்கிறார்.]

ஸ்ரீ அமெரி :—

இல்லை இல்லை என்றே சொல்வோம்—இந்த
இல்லை யெனும் பல்லவியை எந்நாளும் படிப்போம்
காயிதே ஆஸமும் நம்மை—கை
விட்டுடுவாரென்று கனவிலும் கருதேன்
வாயில் இல்லையென்ற வார்த்தை—நமக்கு
எப்போதுந்தான் உண்டு அச்சமே இல்லை!

ஸ்ரீ சர்ச்சில் :—ஆமாங்காணும்; ஒரு வேளை ஜின்னா நம்மைக் கைவிட்டுக் காந்தியுடன் சேர்ந்து கொண்டால்?

ஸ்ரீ அமெரி :—

காந்தியும் ஜின்னாவும் சேர்ந்து—ஒருக்கால்
கருத்தொருமித்துக் கடுகியே வந்து
இந்தியா தேசத்தை விட்டு—அப்பால்
நடந்திடு என்றுமே கட்டளை யிட்டால்
இல்லை இல்லை யென்றே சொல்வோம்.

ஸ்ரீ சர்ச்சில் :—'இரண்டு பேரும் ஒத்துப் போனால் சுயாட்சி கொடுப்போம்' என்று நீர் சொன்ன வார்த்தை என்ன ஆவது?

ஸ்ரீ அமெரி :—

இந்துவும் முஸ்லிமும் சேர்ந்து—ஒத்து
வந்திடும் பட்சத்தில் சுயராஜ்யம் என்று
மந்திரி நான் சொன்னதோர் வார்த்தை—
வெறும் சாக்கன்றி
நிஜமென்று நீர் நினைத்தீரோ ?

ஸ்ரீ சர்ச்சில் :—சபாஷ்! அப்படிச் சொல்லும்! அது தானே பார்த்தேன்! அப்படியானுல் பயமில்லை யென்று சொல்லும்!

ஸ்ரீ அமெரி :—துளிக்கூடப் பயமில்லை. இந்தச் சாக்குப் போனுல் இன்னும் எத்தனையோ சாக்குகள் கிடைக்கும்.

சீக்குகள் பார்ஸிகள் என்று—இன்னும்
கிறிஸ்தவர், தாழ்ந்தவர், உயர்ந்தவர் என்று
ஆயிரமுண் டங்கு ஜாதி—எனில்
அன்னியர் நமக்கங்கே என்னவோ பீதி?

ஸ்ரீ சர்ச்சில் :—சபாஷ்! மந்திரி! ஆனுல் தும்பை விட்டு வாலைப் பிடிப்பதைப் போன்ற பைத்தியக்காரத் தனம் வேறு ஒன்றும் கிடையாது. ஆகவே காந்தியும், ஜின்னுவும் ஒன்று சேராமல் இருப்பதற்கு ஏதாவது வழி பண்ணி ஆகவேண்டும்.

ஸ்ரீ அமெரி :—அதைப்பற்றிக் கவலைப் படாதீர்கள். நமக்கு வேண்டியவர்கள் எத்தனையோ பேர் இந்தியாவில் இருக்கிறுர்கள். மகாகனம் சினிவாச சாஸ்திரியார் இருக்கிறுர். ஸர் சி. பி. ராமசாமி அய்யர் இருக்கிறுர். டாக்டர்

காரே இருக்கிறார். இன்னும் வீர சவர்க்கர் இருக்கவே இருக்கிறார். அவர்கள் எல்லாம் காந்தியை ஒரு கை பார்க்காமல் சும்மா விட்டு விடுவார்களா? நீங்கள் கவலையற்றுச் சுருட்டுக் குடியுங்கள்.

ஸ்ரீ சர்ச்சில்:—பேஷ்! நீர் இருக்கும்வரை நமக்கு என்ன குறை?

[சுருட்டுப் புகை இன்னும் அதிகமாகிறது.]

திரை

# யமனுக்கும் ஓர் யமன்

[சென்னை மௌண்ட் ரோட்டில் ஒரு மோட்டார் யமன் வெகு வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறது. மோட்டார் யமனைக் கண்டு துள்ளிக் குதிக்கும் பாத சாரிகள் ரஸ்தா ஓரத்தில் உள்ள மரங்களின் மீது மோதிக் கொள்கிறார்கள். இதைக் கண்டு மோட்டார் யமன் கர்வப்படுகிறது. அந்தச் சமயத்தில் பின்னால் ஒரு ராணுவ லாரி வெகு வேகமாக வரவே, அதைக் கண்டு மோட்டார் யமன் பயந்து, பக்கத்தில் பாதசாரிகளுக்கென்று கட்டப் பட்டிருக்கும் மேடைமீது ஏறுகிறது. ஆனால் எதிரே உள்ள ஒரு மரம், "எதற்காக இத்தனை அவசரம்?" என்று அதைப் பார்த்துக் கேட்பதுபோல் 'டங்' என்ற மோதலுடன் அதை நிறுத்துகிறது. அடுத்த கணமே ராணுவ லாரி இதைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு பக்கத்தில் வந்து நிற்கிறது.]

ராணுவ லாரி:—ஐயா, மோட்டார் வண்டியாரே! எதற்காக இப்படி பட்டப் பகலில் தெருவில் உள்ள சர்க்கார் மரத்தைப் பெயர்க்கப் பார்க்கிறீர்! யாராவது போலீஸ்காரன் பார்த்தால் பிடித்துக் கொள்ளப் போகிறான்!

மோட்டார் யமன்:—(தலையைத் தடவி விட்டுக் கொண்டே) ஆமாம், ஐயா! உமக்கு எல்லாம் வேடிக்கை

யாகத்தான் இருக்கும். என்னைப்போல் நீரும் மரத்தின் மீது மோதிக்கொண்டால் அப்பொழுது தெரியும்.

ராணுவ லாரி:—என்னமோ நான் மரத்தின் மீது மோதிக்கொண்டது கிடையாதது போலல்லவா பேசுகிறீர்? இதுவரையில் நான் எத்தனை மரங்கள், எத்தனை குப்பைத் தொட்டிகள், எத்தனை போலீஸ்காரன் மீது மோதிக்கொண் டிருப்பேன்! அது இருக்கட்டும், உம்மை யார் ஐயா மரத் தின் மீது மோதிக் கொள்ளச் சொன்னது? ரஸ்தாவில் போகாமல் எதற்காகப் பாதசாரிகளுக்கென்று கட்டப்பட் டிருக்கும் மேடை மீது ஏறினீராம்?

மோட்டார் யமன்:—எல்லாம் உமக்குப் பயந்து கொண்டுதான். மேடை மீது ஏறினதால் இப்பொழுது தலைக் காயத்தோடு விட்டது. ரஸ்தாவில் போயிருந்தால் இத்தனை நாழி நீர் என்னைப் பைசல் செய்திருக்க மாட் டீரா?

ராணுவ லாரி:—('ஹஹ்ஹஹ்ஹா' என்று சிரித்துக் கொண்டு) ஆ! இப்பொழுது தெரிகிறதா, யார் பெரிய யமன் என்று? என்னமோ பாதசாரிகளைக் கொல்வதில் உம்மை யாரும் மிஞ்ச முடியாது என்று இத்தனை நாளும் கர்வப்பட்டுக் கொண்டிருந்தீரே, இப்பொழுது என்ன சொல்கிறீர்?

மோட்டார் யமன்:—நான் என்ன சொல்லக் கிடக் கிறது, யமதர்ம மகாராஜாவே! ஆனால்........?

ராணுவ லாரி:—ஆனல் என்ன?

மோட்டார் யமன் :—ஆனால், ஏழைகளாகிய எங்கள் மீது உமக்கு ஏன் இத்தனை கோபம்? எதற்காக இப்படி எங்களைக் கண்டதும் மோதிக் கொன்று தீர்க்கிறீர்?

ராணுவ லாரி :—அதுவா, அதற்குத் தான் 'மோட்டார் கர்வ பங்கம்' என்று பெயர்!

மோட்டார் யமன் :—மோட்டார் கர்வ பங்கமா? எதற்காக? நாங்கள் எதைக் குறித்துக் கர்வப்பட்டோம்?

ராணுவ லாரி :—உங்களைக் கண்டால் பாதசாரிகள் நடுங்கி ஓடி ஒளிகிறார்கள், உங்களுக்கு மோட்டார் யமன் என்று கூடப் பெயர் கொடுத்து விட்டார்கள் என்று நீங்கள் கர்வப் பட்டுக் கொண்டிருந்தீர்கள் அல்லவா? அந்த கர்வத்தை அடக்குவதற்காகத்தான் நாங்கள் கிளம்பியிருக்கிறோம். இப்பொழுது பாருங்கள், பாதசாரிகள் உங்களைக் கண்டு நடுங்குவதைவிட எங்களைக் கண்டு அதிகமாக நடுங்குகிறார்கள். நீங்கள் மோதினால், பாதசாரிகளுக்கு உயிர் போய்விடும் என்கிற நிச்சயம் இல்லை. காலோ, கையோ ஒடிவதுடன் தப்பித்துக் கொள்கிறவர்கள் எத்தனையோ பேர்! ஆனால் எங்கள் விஷயம் அப்படியில்லை. நாங்கள் மோதினால் ஆள் பைசலாக வேண்டியதுதான். இன்னும் நாங்கள் ஏழை, பணக்காரன் என்கிற வித்யாசமே பார்ப்பதில்லை. எல்லாப் பாதசாரிகளும் எங்களுக்கு ஒன்றுதான். ஏன், பாதசாரிகள் வரையில் போவானேன்? உம்மைப் போன்ற மோட்டார்களே எங்களைக் கண்டு நடுங்கும்படி செய்துவிட்டோமா, இல்லையா?

மோட்டார் யமன் :—யமதர்ம ராஜனே! எங்கள் கர்வத்தை அடக்கிவிட்டீர்கள் என்பதை ஒப்புக் கொள்கி

றேன். ஆனால் அதற்காகப் பாதசாரிகளைத் தாங்கள் கொல்வதுதான் எனக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை.

ராணுவ லாரி:—ஏது, திடீரென்று உமக்குப் பாதசாரிகளின் மீது அத்தனை பச்சாத்தாபம் ஏற்பட்டு விட்டது?

மோட்டார் யமன்:—பின் ஏற்படாமல் என்னமாயிருக்கும்? நாங்கள் ஆடிக்கு ஒன்று, அமாவாசைக்கு ஒன்று என்று இந்த ரீதியில்தான் மனிதர்களை மோதித் தள்ளிக் கொண்டிருந்தோம். தாங்கள் என்னடா வென்றால் மனிதர்களை மோதித் தள்ளாத நாளென்ன நாளே என்று கருதுவதுபோல் தினம் யாரையாவது மோதித் தள்ளிக் கொண்டும் யாரையாவது மேல் உலகத்துக்கு அனுப்பிக்கொண்டும் இருக்கிறீர். ஏது, தாங்கள் இப்பொழுது போகும் ரீதியைப் பார்த்தால் எங்களுக்கு வெகு சீக்கிரம் நல்ல பெயர் வாங்கிக் கொடுத்துவிடுவீர்கள்போல் தோன்றுகிறதே!

ராணுவ லாரி:—எத்தனை நல்ல பெயர் வாங்கிக் கொடுத்தால்தான் உமக்கு நன்றியிருக்கிறது! உங்களுக்கு நிறைய பெட்ரோல் கொடுக்காமல், இருக்கிற எல்லாப் பெட்ரோலையும் நாங்களே சாப்பிட்டு விடுகிறோம் என்று குறைகூறிக் கொண்டிருக்கிறீர்கள்? எவ்வளவுக் கெவ்வளவு உமக்குப் பெட்ரோல் குறைவாகக் கொடுக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு நீர் தெருவில் அதிகமாக நடமாட முடியாது, அவ்வளவுக் கவ்வளவு உமக்கு நல்ல பெயர் கிடைக்கும். இந்த விஷயத்தை நீர் நினைத்துப் பார்த்தால் தானே?

மோட்டார் யமன்:—நினைத்துப் பார்த்தேன். ஆனால்—

ராணுவ லாரி :—ஆனால் என்ன?

மோட்டார் யமன் :—ஆனால் இப்பொழுது மரத்தில் போய் முட்டிக் கொள்ளும்படி செய்து விட்டீரே! அதற்குள்ள நஷ்ட ஈடுக்கு ஏதாவது—

ராணுவ லாரி :—என்ன நஷ்ட ஈடா? நான் உம்மைக் கொல்லாமல் விட்டேனே, அதுவே பெரிய நஷ்ட ஈடு! ஊம், என்ன பேசாமல் இருக்கிறீர்? போம், வழியைப் பார்த்துக்கொண்டு!

[ 'குர்ர்' என்ற சத்தம் கேட்கிறதே யொழிய, மோட்டார் புறப்படும் வழியாயில்லை. ]

என்ன இன்னும் பேசாமல் இருக்கிறீர்? போகிறீரா, இல்லை, ஒரு முட்டுக் கொடுக்கட்டுமா?

[ இதைக் கேட்டதும் செத்தோம், பிழைத்தோம் என்று மோட்டார் யமன் அங்கு வந்த ஒரு பாதசாரியைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறது. மோட்டார் யமனை ராணுவ லாரி தூக்கிக் கொண்டு ஓடுகிறது. ராணுவ லாரி மோட்டார் வண்டியை முந்திக் கொள்ளப் போகும் சமயத்தில் எதிரே ஒரு டிராம் வண்டி வருகிறது. ராணுவ லாரியும் டிராம் வண்டியும் மோதிக் கொள்ளவே, ராணுவ லாரி பக்கத்தில் உள்ள மோட்டார் மீது சாய்கிறது. மோட்டார் தெரு ஓரத்தில் நிலக்கடலை கூறு கட்டி விற்றுக் கொண்டிருக்கும் ஒரு கிழவி மீது விழுந்து, அவள் ஆத்மாவுக்கு இம் மாய உலகினின்றும் விடுதலை அளிக்கிறது. ]

# தந்தியும் தபாலும்

ஸ்ரீமான் தந்தி:—என்ன மிஸ்டர் தபால்! எங்கே இத்தனை அவசரமாகப் போய்க் கொண்டிருக்கிறீர்! சற்று நின்று பேசிவிட்டுப் போனால்தான் என்ன?

ஸ்ரீமான் தபால்:—ஐயய்யோ! என்னால் முடியாது. என்னையும் உம்மைப்போல் குஷிப் பேர்வழி என்று நினைத்துக் கொண்டீரா, என்ன? எனக்கு அவசர வேலை இருக்கிறது. என்னை விடும். நான் போயாகவேண்டும்.

ஸ்ரீமான் தந்தி:—(ஸ்ரீமான் தபாலைத் தடுத்துக் கொண்டு) இரும் ஐயா, எல்லாம் போகலாம்! என்னமோ பிரமாத அவசரம்! என்னைவிட உமக்கு என்ன அவசரம் தட்டுக் கெட்டுப் போகிறது, கேட்கிறேன்.

ஸ்ரீமான் தபால்:—(கையில் வைத்திருக்கும் கார்டைக் காண்பித்து) இதோ, இந்தக் கார்டைப் பாரும். என்ன எழுதி யிருக்கிறது? "இக்கார்டு நாளைக்கே உனக்குக் கிடைக்கும் என்று நினைக்கிறேன். மறுநாளே இதற்குப் பதில் எதிர்பார்ப்பேன்" என்று எழுதியிருக்கிறதா, இல்லையா? அப்படி யிருக்கும்பொழுது நான் உம்மோடு அரட்டை யடித்துக் கொண்டிருந்தால் இந்தக் கார்டு எப்படி நாளைக்கே இந்த விலாசதாரைப் போய்ச் சேருகிறது? எப்படி இந்த விலாசதார் பதில் மறுநாளே இங்கே வந்து கிடைக்கிறது?

*ஸ்ரீமான் தந்தி:*—(கட கட்டுக்கட என்று சிரித்துக் கொண்டு) பேஷ்! பேஷ்! ரொம்ப அழகாயிருக்கிறது உம்முடைய காரியம்! அப்படித்தான் உம்முடைய கார்டில் ஏதாவது தலைபோகிற காரியம் எழுதியிருக்கிறதோ என்றால் அதையும் காணோமே? நான் சௌக்கியம், நீ சௌக்கியமா என்று கேட்டிருக்கிறது. அவ்வளவுதானே? பூ! இதற்காகவா இத்தனை அவசரப்பட்டீர்?

*ஸ்ரீமான் தபால்:*—ரொம்ப அழகாயிருக்கிறது நீர் சொல்வது? அவர்கள் அவசர காரியம் ஒன்றும் எழுதவில்லையே என்பதற்காக நாம் தாமதப்படுத்தாமல் கடிதத்தைக் கொண்டுபோய்ச் சேர்க்கக்கூடாது என்கிறீரா? நான் சௌக்கியம், நீ சௌக்கியமா என்று கேட்டிருக்கிற செய்தியைச் சீக்கிரம் கொண்டு போய்ச் சேர்த்தால் இரண்டு பேருமே சந்தோஷப்படுவார்கள். எனக்குக் கஷ்டமாக இருக்குமே என்பதற்காக அவர்கள் சந்தோஷத்தைக் கெடுக்கச் சொல்கிறீரா?

*ஸ்ரீமான் தந்தி:*—(எகத்தாளமாக) பலே! பலே! எத்தனை நாளாக ஐயா, நீர் இந்தமாதிரி பொதுஜன உபகாரி ஆனீர்! பொது ஜனங்களின் சந்தோஷத்துக்காக உடல், பொருள், ஆவி, எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட்டவர்போல் பேசுகிறீரே!.

*ஸ்ரீமான் தபால்:*—நான் ஒன்றும் என்னைத் தியாக புருஷன் என்றோ, தியாகமூர்த்தி என்றோ கூறிக்கொள்ள விரும்பவில்லை. நான் வாங்கும் முக்காலணா கூலிக்கு என் வேலையைச் சரியாகச் செய்ய வேண்டாமா என்றுதான் கேட்கிறேன்.

ஸ்ரீமான் தந்தி:—நீர் வாங்கும் இந்த காலணுக் காசுக்காக இப்படி விழுந்து விழுந்து உழைக்கிறீரே, என்னைப் போல் ஒரு ரூபாயும் இரண்டு ரூபாயும் வார்த்தைக் கணக்கில் சம்பளம் வாங்கினுல் என்ன பண்ணுவீரோ? இதோ பாரும், இந்தத் தந்தியை.......! பரவாயில்லை. படித்துப் பாரும். என்ன எழுதி யிருக்கிறது?

ஸ்ரீமான் தபால்:—(படித்துப் பார்த்து விட்டு) ஐயய்யோ! என்ன ஐயா! இப்படிச் சும்மா உட்கார்ந்திருக்கிறீர்? "உடம்பு மிகவும் அபாயமான நிலையில் இருக்கிறது. உடனே புறப்பட்டு வரவும்" என்று எழுதி இருக்கிறது, பேசாமல் உட்கார்ந்திருக்கிறீரே?

ஸ்ரீமான் தந்தி:—(சிரித்துக்கொண்டே) ஆமாம், தேதி என்ன போட்டிருக்கிறது என்று பாரும்!

ஸ்ரீமான் தபால்:—ஐயய்யோ! என்ன ஐயா! தந்தி கொடுத்து நான்கு நாளாகிறது, இன்னும் கொண்டு போய்ச் சேர்க்காமல் இருக்கிறீரே? உம்மை நம்பினதற்குப் பதில் என்னை நம்பி யிருந்தால் இத்தனை நாழி கடிதம் போய்ச் சேர்ந்திருக்குமே!

ஸ்ரீமான் தந்தி:—உம்மை நம்பி யிருந்தால் கடிதத்தைக் கொண்டுபோய்ச் சேர்த்திருப்பீரோ, இல்லையோ!

ஸ்ரீமான் தபால்:—இதற்குச் சந்தேகமு் வேறேயா? கட்டாயம் கடிதம் என் கையில் கிடைத்த மறுநாளே கொண்டுபோய்ச் சேர்த்திருப்பேன்.

ஸ்ரீமான் தந்தி:—இது விஷயம் பொது ஜனங்களுக்கும் தெரியுமோ, இல்லையோ!

ஸ்ரீமான் தபால் :—அதுதான் உம்முடைய லட்சணத்தை எல்லாரும் தெரிந்துகொண்டு இருக்கிறார்களே! தந்தி போய்ச் சேர்வதற்கு முன்னால் தபால் போய்ச் சேர்ந்து விடுகிறது என்று அவர்களுக்குத் தெரியாமலா இருக்கிறது!

ஸ்ரீமான் தந்தி :—தெரிந்து கொண்டிருக்கிறார்களோ, இல்லையோ? பின் ஏன் ஐயா தந்தி அடித்து என் கழுத்தை அறுக்கிறார்கள்? தபால் போட்டுத் தொலைக்கிறதுதானே!

ஸ்ரீமான் தபால் :—ஓஹோ! இப்பொழுது புரிந்தது உம்முடைய தந்திரம். வேலைக்குச் சோம்பல் பட்டுக் கொண்டு இப்படிச் சொல்கிறீரா?........ஆனால் எத்தனை நாளைக்கு உம்முடைய தந்திரம் பலித்துக் கொண்டு வரும் என்று நினைத்தீர்?

ஸ்ரீமான் தந்தி :—பலிக்கிற மட்டும் பலிக்கட்டும்! அது வரை லாபந்தானே?

ஸ்ரீமான் தபால்:—ஊஹூம். அப்படியா? உம்முடைய காரியம் சர்க்காருக்குத் தெரிந்தால் உம்மை என்ன பண்ணுவார்கள் தெரியுமா?

ஸ்ரீமான் தந்தி :—(கடகட கட்டுக் கட என்று சிரித்துவிட்டு) அட பயித்தியக்கார மனுஷா! அவர்களுக்குத் தெரியாது என்று நினைத்தீர்? எல்லாம் தெரியும் ஐயா. ஆனால் என்னை அவர்கள் ஒன்றும் பண்ண மாட்டார்கள். இதோ என் உடையைப் பாரும். என் ராணுவ உடையைக் கவனித்தீரா? இப்பொழுதெல்லாம் நான் ராணுவ வேலையாக்கும் செய்து கொண்டிருக்கிறேன். ராணுவ வேலை செய்கிற நான் பொது ஜனங்களின் வேலையைச் செய்யாத

தற்காக சர்க்கார் என்னே என்ன பண்ணுவார்கள் என்று கேட்கிறேன்! பொது ஜனங்கள் வேண்டுமானுல் என்னைத் திட்டலாம். ஆனுல், பொதுஜன அபிப்பிராயத்தை இந்தக் காலத்தில் யார் கவனிக்கிருர்கள்? சர்க்காரே கவனிக்காம லிருக்கும்போது நான் கவனிப்பேன் என்று எதிர்பார்ப் பது மடத்தனம். இது இருக்கட்டும். இதோ ஒரு வேடிக்கை பார்த்தீரா?

[ ஒரு தந்தியை எடுத்துக் கொடுக்கிருர். ]

ஸ்ரீமான் தபால் :—(படிக்கிருர்) "இம்மாதம் பதி னைந்தாம் தேதியன்று பங்களூருக்கு வருகிறேன், ஸ்டேஷ னுக்கு வண்டி யனுப்பவும்."

ஸ்ரீமான் தந்தி :—பார்த்தீரா வேடிக்கையை! ஆசாமி ஸ்டேஷனுக்கு வண்டி வராமல், திக்கு முக்காடி பங்களூர் போய்ச் சேர்ந்து, காரியத்தை முடித்துக்கொண்டு ஊருக் கும் திரும்பியாகி விட்டது. நான் இன்றைக்குத்தான் தந்தி யைக் கொண்டு போய்ப் பங்களூரில் கொடுக்கப் போகி றேன். அந்த மனுஷர் இந்த மாதம் பதினைந்தாம் தேதி ஆசாமி திரும்பவும் வரப் போகிருர் என்று நினைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்கு வண்டி அனுப்பப் போகிருர்!

[ கடகட்டுக் கட்டுக்கட என்று சிரிக்கிருர். ]

ஸ்ரீமான் தபால் :—இது என்ன, கூத்தாகவல்லவா இருக்கிறது!

ஸ்ரீமான் தந்தி :—இது என்ன கூத்து! இதைவிடப் பெரிய கூத்து இதோ பாரும்.

[ இரண்டு தந்திகளைக் கொடுக்கிருர். ]

ஸ்ரீமான் தபால் :—(வாசிக்கிறார்) "நான் இன்று புறப்பட்டு வருகிறேன்," "நான் இன்று புறப்பட்டு வரவில்லை." என்ன ஐயா இரண்டு தந்திகளும் ஒருவரே ஒரே நாளில் கொடுத்ததுபோல் அல்லவா இருக்கிறது?

ஸ்ரீமான் தந்தி :—ஆம், ஒரு நாளில் கொடுத்ததுதான். முதலில் புறப்பட்டு வருவதாகத் தந்தி கொடுத்தார். பிறகு புறப்பட்டுப் போகவேண்டாம் என்று நினைத்து வரவில்லையென்று தந்தி கொடுத்தார். இரண்டு தந்திகளையும் நான் சேர்ந்தாற்போல் கொண்டுபோய்க் கொடுக்கப் போகிறேன். தந்தி கொடுத்த நேரமோ இரண்டிலும் அழிந்திருக்கிறது. ஆகவே தந்தி பெற்றுக் கொள்ளப் போகிறவர் விழிக்கப் போகிறார்—எந்தத் தந்தி முதலில் அடித்தது என்று.

[சிரிக்கிறார்.]

ஸ்ரீமான் தபால் :—என்ன, உம்ம காரியம் எல்லாம் வேடிக்கையாய் இருக்கிறதே?

ஸ்ரீமான் தந்தி :—இது என்ன பிரமாத வேடிக்கை! இதோ இந்தத் தந்திகளைப் பாரும்.

[மூன்று தந்திகளைக் கொடுக்கிறார்.]

ஸ்ரீமான் தபால் :—(வாசிக்கிறார்) "இன்னும் இரண்டு நாட்களுக்குள் பதில் கிடைக்கா விட்டால் கல்யாணம் வேறு இடத்தில் நிச்சயமாகிவிடும்."

"நான்கு நாட்களாகியும் தங்களிடமிருந்து பதில் கிடையாது. ஆகவே கல்யாணத்தை வேறு இடத்தில் நிச்சயம் பண்ணப் போகிறோம்."

"இரண்டாம் தந்தி கொடுத்து இரண்டு நாட்களாகி யும் இன்னும் பதில் இல்லை. ஆகவே கல்யாணம் வேறு இடத்தில் நிச்சயம் பண்ணியாகி விட்டது. கல்யாணத் திற்கு வரவும்."

ஸ்ரீமான் தந்தி:—எப்படி என் காரியம்? இம்மூன்று தந்திகளையும் சேர்த்து இன்றுதான் கொடுக்கப்போகிறேன்.

ஸ்ரீமான் தபால்:—தங்கள் காரியம் எனக்குப் புரியவே இல்லை. ஆனால் எனக்கு என்னமோ தங்கள் தந்திரம் வெகு நாள் பலிக்கும் என்று தோன்றவில்லை. தங்கள் தாமதத்தைப் பற்றி விசாரிப்பதற்காகத் தந்தி, தபால் இலாகா அதிகாரிகள் எல்லாரும் சீக்கிரமே ஒரு மகாநாடு கூட்டப் போகிறார்களே, தெரியுமா?

ஸ்ரீமான் தந்தி:—தெரியாமல் என்ன? கூட்டட்டுமே! யார் அதற்கெல்லாம் பயந்தார்கள்! வேணும்னு என் வேலை யையும் சேர்த்து நீரேதான் பாருமே. எனக்கெல்லாம் சம்பளம் முக்கியமே யொழிய வேலை முக்கியமில்லை.

ஸ்ரீமான் தபால்:—நீர் என்னமோ பொது ஜனங்கள் கைக்கு ஆட்சி வரவே வராது. உம் இஷ்டப்படி பொது ஜனங்களை அலட்சியம் பண்ணலாம் என்று நினைத்துக் கொண்டு பேசுகிறீர்! ஆனால் நிலைமை வெகு காலம் இப்படி இருக்கும் என்று நினைக்காதேயும்.

ஸ்ரீமான் தந்தி:—நம் நாட்டில் தேசத் துரோகிகள் இருக்கும் வரையில் நிலைமை மாறும் என்கிற கவலை எனக்கு இல்லை.

ஸ்ரீமான் தபால்:—அட பாவி மனுஷா! இப்படியா நினைத்துக் கொண்டிருக்கிறீர்! இன்னும் கொஞ்சம் நாள் போனால் நீரே சொல்வீர்! உம்முடைய அசட்டுத்தனத்தைப் பார்த்து எனக்குத் தலை சுற்றுகிறது. மயக்கம் வருகிறது. இதோ கீழே விழப் போகிறேன். உடனேயே என் வீட்டாருக்கு ஒரு தந்தி அனுப்பும்.

[கீழே விழப் பார்க்கிறார்]

ஸ்ரீமான் தந்தி:—ஓய்! என்னை நம்பி மூர்ச்சை போடாதேயும்! நான் உம்மைப்பற்றித் தந்திகொண்டு போய்க் கொடுப்பதற்கு இன்னும் பத்து நாளாவது ஆகும்.

[இதைக் கேட்டதும் மூர்ச்சை போட்டுக் கீழே விழ இருந்த ஸ்ரீமான் தபால் சமாளித்துக் கொள்கிறார்.]

# நடக்காத கல்யாணம்

பிரபல வடநாட்டுச் சினிமா நடிகர் ராஜ்குமாரும், பிரபல வடநாட்டு சினிமா நடி ராதாராணியும் சென்ற பத்து வருஷங்களாக எத்தனையோ படங்களில் எத்தனையோ காதல் கட்டங்களில் நடித்தாகி விட்டது. ஒவ்வொரு படத்திலும் எத்தனையோ இடையூறுகளுக்கும், இடைஞ்சல்களுக்கும் அப்பால் இரண்டு பேருக்கும் கல்யாணமும் நடந்திருக்கிறது.

ஒரு படத்தைப் பார்த்தாற் போல் ஒரு படத்தில் ராஜ்குமார் ஒரு ஏழை வேலையில்லாப் பட்டதாரியாக வருகிறார். (இது யுத்தத்துக்கு முந்தைய கதையாதலால் அந்த வேலையில்லாப் பட்டதாரி ராணுவத்தில் சேர்ந்து தன் வறுமையைத் தீர்த்துக்கொள்ள முடியவில்லை.) ராதாராணி ஒரு படத்தில் பார்த்தாற்போல் ஒரு படத்தில் ஒரு பெரிய ஜமீன்தாரின் மகளாக வருகிறாள்.

இந்த ஜமீன்தார் மகள் வேறு எல்லாரையும் விட்டு, இந்த வேலையில்லாப் பட்டதாரியைத்தான் கல்யாணம் பண்ணிக்கொள்வேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள்.

இது என்ன, ஒரு படத்தைப் பார்த்தாற்போல் எல்லாப் படங்களிலும் ராஜ் குமார் வேலையில்லாப் பட்டதாரியாகத்தானா வரவேண்டும்? உலகில் வேலையில்லாப் பட்டதாரியைத் தவிர வேறு ஜனங்கள் கிடையாதா? வரும்

படியில்லாத வக்கீல்கள் இல்லையா? பிராக்டிஸ் இல்லாத டாக்டர்கள் இல்லையா? வியாபாரம் இல்லாத வியாபாரிகள் இல்லையா? என்றெல்லாம் நீங்கள் கேட்கலாம்.

அதேமாதிரி பெண்ணைப் பெற்ற பணக்காரர்கள், உலகில் ஜமீன்தாரைத் தவிர வேறு யாரும் கிடையாதா? ஐ. சி. எஸ். காரர்கள் இல்லையா, ஹைக்கோர்ட் ஜட்ஜுகள் இல்லையா, மில் முதலாளிகள் இல்லையா என்றெல்லாம் கேட்கலாம்.

ஆனல் நீங்கள் அப்படியெல்லாம் கேட்டால் உங்களுக்கு வடக்கத்தி சினிமாக்காரர்களைப்பற்றி ஒன்றும் தெரியாது என்றுதான் கூறுவேன்.

நம் நாட்டில் எப்படி ஒரு புராணப் படம் பிடித்து வெற்றியடைந்தால் பின்னல் எல்லாம் புராணப் படங்களாகவே பிடித்துக் கொண்டு போகிருர்களோ, அதே மாதிரி வடக்கே, ஒரு வேலையில்லாப் பட்டதாரியையும், ஜமீன்தார் மகளையும் வைத்துக் காதல் படம் பிடித்துக் காசைக் கை நிறையக் கண்டால் உடனே அந்த வேலையில்லாப் பட்டதாரியையும், ஜமீன்தார் மகளையும் விடவே மாட்டார்கள். இந்த இரண்டு பேரையும் வைத்துக் கொண்டே படம் படமாகப் பிடித்துத் தள்ளுவார்கள். நிற்க.

சினிமா நடிகர் ராஜ்குமார், சினிமா நடி ராதாராணியும், இம்மாதிரி எத்தனையோ, படங்களில், அதுவும் காதல் கட்டங்களில், சேர்ந்து நடித்தும் அவர்களுக்குள் காதல் என்பது துளிக்கூட உண்டாகவே இல்லை.

அத்தனைக்கும் வாழ்க்கைக் காதலைத் தூக்கியடிக்கக் கூடிய எத்தனையோ காதல் கட்டங்களில் அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து நடித்திருக்கிறார்கள். ஒவ்வொரு சமயம் ஜமீன்தார் மகன் வேலையில்லாப் பட்டதாரி மீது காதல் கொள்ளும் ஆர்வத்தைப் பார்த்துவிட்டு, கொட்டகையில் உள்ள புருஷர்கள் தங்கள் மனைவிமார்களைக் கோபித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அதற்கு அந்த மனைவிமார்கள் "அந்த மாதிரி காதல் புரிவதற்கு அவர்களுக்கு எத்தனை சம்பளம் கொடுக்கிறார்கள், தெரியுமா? நீங்கள் ஒரு காலணா கையில் கொடுக்க மாட்டேன் என்கிறீர்களே! இந்த சினிமாவிற்குக் கூட, ஒரு மாத காலம் கெஞ்சிக் கூத்தாடிய பிறகு தானே அழைத்துக் கொண்டு வந்தீர்கள்!" என்று பளிச்சென்று, சுடச் சுடப் பதில் கேட்டிருக்கிறார்கள்.

ராஜகுமாரரும், ராதாராணியும் அத்தனை தத்ரூபமாக நடித்திருக்கிறார்கள். வேலையில்லாப் பட்டதாரியைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று பிடிவாதமாக இருந்த ஜமீன்தார் மகளை அவளுடைய பெற்றோர்கள் எவ்வளவோ துன்புறுத்தி யிருக்கிறார்கள். வேலையில்லாப் பட்டதாரியை எவ்வளவோ ஹிம்சித்திருக்கிறார்கள். ஒவ்வொரு படத்திலும் ராதாராணி, இந்தக் காதல் கட்டத்தில் மூர்ச்சை போட்டு விழுந்திருக்கிறாள்.

ஷூட்டிங்கின்போது ராதாராணி அநேக தடவை உண்மையிலே மூர்ச்சையாகி விழுந்திருக்கிறாள்.

அதேமாதிரி ராஜகுமாரும் இந்த ஜமீன்தார் மகளையே அடைவதற்கு எத்தனையோ சித்திரவதைக்கு உள்ளாகி

யிருக்கிறார். ஜமீன்தார் ஆட்களிடம் எத்தனையோ கசை யடிகள் பட்டிருக்கிறார்.

படம் அப்படியே தத்ரூபமாக இருக்க வேண்டும், பார்க்கிறவர்களை மயிர் சிலிர்க்க வைக்கவேண்டும் என்பதற்காக, டைரக்டர் ராஜ்குமாரை உண்மையிலேயே நன்றாக அடிக்கச் சொல்லி யிருக்கிறார்.

இப்படியாக, இத்தனைக் காதல் கட்டங்களில் சேர்ந்து நடித்தும், ராஜ்குமாருக்கும், ராதாராணிக்கும் காதல் என்பது என்னவோ உண்டாகவே இல்லை. இருவருடைய நடிப்பின் திறனும் அதிகரிக்க, அதிகரிக்க ஒருவரைக் கண்டால் ஒருவருக்கு வெறுப்பு அதிகரித்து வந்ததே யொழிய அன்பு ஏற்படவே இல்லை.

சினிமா நடிகர்கள் என்றாலே நாக்கில் நரம்பின்றி, கன்னா பின்னாவென்று தூஷிக்கும் ஜனங்களுக்குக்கூட இது ஆச்சரியமாக இருந்தது. உண்மையில் அவர்களில் சிலருக்கு வருத்தமாகவும் இருந்தது என்று சொல்லவேண்டும். பொழுது போக்குவதற்கு வேறு ஒன்றும் கிடைக்கா விட்டால், சினிமா நடிகர்களைப் பற்றிக் கன்னாபின்னா வென்று பேசும் ஜனங்களுக்கு இந்த இரண்டு நடிகர்களும் ஒரு விஷயமும் கொடுக்காவிட்டால் இவர்களுக்குக் கோபமாக இருக்காதா என்ன?

ஆனால் படமுதலாளிகளுக்கு என்னமோ இதனால் ஏற்பட்ட ஆனந்தம் சொல்லி முடியாது. ராஜ்குமாருக்கும், ராதாராணிக்கும், உள்ள வெறுப்பு அதிகரிக்க, அதிகரிக்க, ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு பிரமாதமாக நடிக்க ஆரம்பித்தனர்.

இவர்கள் இரண்டு பேர் நடிப்புத் திறனும் அதிகரிக்க, அதிகரிக்க, இவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து நடித்த காதல் கட்டங்கள், எல்லாரையும் மயிர்சிலிர்க்க வைத்தன. இவர்கள் படத்தைப் பார்த்த ஜனங்களும் "ஆஹா! இது அல்லவா காதல்! காதலர்கள் என்ருல் இப்படியல்லவா உண்மையாக நடந்துகொள்ள வேண்டும்!" என்று சிலா கித்துக் கூறினுர்கள்.

*　　*　　*　　*

ஆனுல் எத்தனை நாளைக்குத்தான் இதே வேலையில்லாப் பட்டதாரியையும், ஜமீன்தார் மகளையும் ஜனங்கள் மாறி, மாறிப் பார்ப்பார்கள்?

சில வருஷங்களுக்குப் பிறகு இந்த மாதிரிக் கதைகளில் ஜனங்களுக்கு அலுப்புத் தட்ட ஆரம்பிக்கவே, படமுதலாளி வேறு புதுக்கதை யொன்று யோசிக்க வேண்டி வந்து விட்டது.

இந்தப் புதுக்கதையில் அவர் துரதிர்ஷ்டம் காரணமாக வழக்கம்போல் இரண்டு பேரும் காதல் புரிவதை விடுத்து, ஒருவரையொருவர் வெறுத்து, கடைசியில் ஒருவர் கையால் ஒருவர் மாளுகின்றனர்.

முதலில் இந்தக் கதையையும், நடிகர் ராஜகுமாரும், நடிகர் ராதாராணியும் பிரமாதமான உணர்ச்சி வேகத்துடன்தான் நடித்தனர். ஜனங்களும் ஹாஹாகாரம் செய்தனர்.

உடனே பட முதலாளி வழக்கம்போல் இதே மாதிரிக் கதைகளாகவே படம் எடுக்கத் தொடங்கினுர்.

இதே மாதிரிக் கதைப் படம் அதிகரிக்க, அதிகரிக்க இந்த இரண்டு நடிகர்களிடையில் இருந்த பழைய வெறுப்பு மெள்ள மெள்ள மாறத் தொடங்கி, கடைசியாகக் காதலில் வந்து நின்றது.

படத்தில் காதலித்துக் கொண்டிருந்த காலத்தில் ஒருவரை யொருவர் வெறுத்துக் கொண்டிருந்த இவர்கள், படத்தில் வெறுக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டதும், வாழ்க்கையில் ஒருவரை யொருவர் காதலிக்க ஆரம்பித்து விட்டனர்.

இப்படி இவர்கள் காதலிக்க ஆரம்பித்தது பட முதலாளியின் துரதிர்ஷ்டமாக முடிந்தது. காதல் அதிகரிக்க, அதிகரிக்க, இவர்களிடை இருந்த பழைய போட்டி மனப்பான்மை குறைந்து கொண்டு வந்தது. போட்டி குறையக் குறைய நடிப்பின் தரமும் குறைய ஆரம்பித்தது. இது குறைந்தால் பட முதலாளியின் பொக்கிஷ நிலைமையும் குறைந்து கொண்டே வரும் என்று சொல்லவும் வேண்டுமா?

ராஜ்குமார், ராதாராணி இவர்களின் காதல் நாடகம் வெகு நாள் நீடிக்கவில்லை. அதாவது ஒரு நாள் காதல் கட்டத்தை விட்டுத் தாண்டி, கல்யாண கட்டத்துக்கே வந்துவிட வேண்டும் என்று இருவரும் தீர்மானித்தனர்.

இதைக் கேள்வியுற்ற பட முதலாளி மிகவும் திகைத்துப் போனார். கிணறு வெட்டப்போக பூதம் அல்லவோ கிளம்பி விட்டது என்று மிகவும் மனம் நொந்தார். ஜமீன்தார் மகன், வேலையில்லாப் பட்டதாரி கதையை விடுத்து,

இந்தமாதிரி புதுக்கதை எடுக்க ஆரம்பித்த தம் மடமையைக் குறித்து வருந்தினர்.

ஆனல் என்ன வருந்தி என்ன பயன்! கலியாண நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. கலியாணப் பத்திரிகையும் அச்சுக்குப் போய் விட்டது.

* * * *

மனம் நொந்து பத்திரிகையைப் பார்த்துக் கொண்டிருந்த பட முதலாளி தேள் கொட்டினவர்போல் துள்ளிக் குதித்தார்.

"ஆஹா! இத்தனை நாளும் இந்த யோசனை தெரியாமல் போய் விட்டதே! கலியாணத்தை நிறுத்தவே முடியாது என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தேனே! இனி கல்யாணத்தை நிறுத்தி விட்டாற் போலத்தான்" என்று ஆனந்தம் தாங்காமல் துள்ளிக் குதித்தார்.

உடனேயே காரைப் போட்டுக் கொண்டு நடிகர் ராஜ்குமாரைப் போய்ப் பார்த்தார். ராஜ்குமார் கண்ணடி முன் நின்றுகொண்டு, காதல் பாட்டு ஒன்றைப் பாடிக் கொண்டிருந்தார்.

பட முதலாளியைக் கண்டதும் ராஜ்குமார் "வாருங்கள் வாருங்கள்" என்று நாற்காலியை எடுத்துப் போட்டார்.

நாற்காலியில் உட்கார்ந்த பட முதலாளி மெள்ள தம் விஷயத்தை ஆரம்பித்தார்.

"ஆமாம். கல்யாணத்துக்கு முன்பு ராதாராணிக்கு அவளுக்கு மிகவும் பிடித்தமான பொருள் எது என்று

கண்டு பிடித்து, அதை அனுப்பி வைத்தால் அவள் மிகவும் சந்தோஷப்படுவாள் அல்லவா?" என்று பட முதலாளி கேட்டார்.

"ஆமாம். படுவாள். ஆனால் அவளுக்கு மிகவும் பிடித்த பொருள் எது என்று என்னால் கண்டு பிடிக்க வில்லையே!"

இதைக் கேட்டு, பட முதலாளி, கல, கல வென்று நகைத்தார்.

"என்னய்யா! இத்தனை நாள் ராதாராணியுடன் பழகி விட்டு இது தெரியாது என்கிறீர். இதோ நான் சொல்லு கிறேன், அவளுக்கு மிகவும் பிடித்த பொருள் எது என்று" என்று ராஜ்குமாரின் காதில் ஏதோ ரகசியமாகச் சொன் னார்.

இதைக் கேட்டதும் ராஜ்குமார் பட முதலாளிக்கு மேல் துள்ளிக் குதித்தார்.

"ஆஹா! உங்களைவிட எனக்கு நல்ல நண்பர் யார்? நல்ல சமயத்தில் வந்து நல்ல யோசனை சொல்லிக் கொடுத் தீர்களே! இதற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? இதோ இந்தக் கல்யாணப் பரிசை அனுப்பி விட்டு மறு காரியம்" என்று சொல்லிவிட்டு, அதற்கு ஏற்பாடு பண்ணுவதற்காக, பட முதலாளியிடம் சொல்லிக் கொள்ளக்கூட நிற்காமல் உள்ளே போய் விட்டார்.

பட முதலாளி அங்கிருந்து நேரே ராதாராணியிடம் சென்றார். ராதாராணியும் கண்ணாடியின் முன்னால் நின்று கொண்டு காதல் பாட்டு பாடிக் கொண்டிருந்தாள். அவ

ளிடமும் முதலாளி கல்யாணப் பரிசைப் பற்றிப் பிரஸ்தா பித்தார்.

"ஆமாம். ராஜ்குமாருக்கு ஏதாவது பரிசு அனுப்ப வேண்டும் என்றுதான். ஆனல் அவருக்கு மிகவும் பிடித்த மானது எது என்று கண்டு பிடிக்கத்தான் முடியவில்லை" என்ருள்.

பட முதலாளி, முன் போலவே கல கல வென்று நகைத்தார்.

"இத்தனை நாள் ராஜ்குமாருடன் பழகி விட்டு, அவ ருக்கு மிகவும் பிடித்தமான பொருள் எது என்பதைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்கிருயே! இதோ நான் சொல்கிறேன், அவருக்கு மிகவும் பிடித்த பொருள் எது என்று" என்று ராதாராணியின் காதில் ஏதோ ரகசியமா கச் சொன்ஞர்.

இதைக் கேட்டதும் ராதாராணி ஆனந்தமேலீட்டால் துள்ளிக் குதித்துக்கொண்டே உள்ளே சென்று மறைந் தாள்.

*　　*　　*　　*

அன்று மாலையே ராஜ்குமாரிடமிருந்து ஒரு பெரிய பார்சல் ராதாராணிக்குப் போய்ச் சேர்ந்தது. ராதாராணி யிடமிருந்து ஒரு பெரிய பார்சல் ராஜ்குமாருக்குப் போய்ச் சேர்ந்தது.

அடுத்த நாள் காலைப் பத்திரிகையில் இவர்கள் இரண்டு பேருக்கும் நடக்கவிருந்த கல்யாணம் நடக்காது என்று கொட்டை எழுத்துக்களில் செய்தி பிரசுரமாயிற்று!

அப்படிக் கல்யாணத்தை நிறுத்தி வைத்துவிட்ட அந்த இரண்டு பார்சல்களில் என்ன இருந்தன தெரியுமா?

ராதாராணிக்கு அனுப்பப்பட்ட பார்சலில் சோப்பு இருந்தது. அந்த சோப்பைத்தான் ராதாராணி தினமும் உபயோகிப்பதாக பத்திரிகைகளில் வருவது உண்டு. ஆனால் அதைப்போலப் பேத்தலான சோப்பு கிடையாது என்பதுதான் ராதாராணியின் அபிப்பிராயம் என்பதும், ஏதோ பணத்துக்காகவும், விளம்பரத்துக்காகவும் ஆசைப் பட்டு அப்படி எழுதிக் கொடுத்தாள் என்பதும் ராஜ்குமா ருக்குத் தெரியாது.

ராஜ்குமாருக்கு அனுப்பப்பட்ட பார்சலில் நிறைய டீத் தூள் இருந்தது. அந்த டீயைத்தான் ராஜ்குமார் தினம் பதினைந்து தடவை, அதாவது வேறு வேலை இல்லாத சமயங் களில் எல்லாம், குடிப்பதாக பத்திரிகைகளில் வருவது உண்டு. ஆனால் அதைப்போலப் பேத்தலான டீ கிடை யாது என்பதுதான் ராஜ்குமாரின் அபிப்பிராயம் என்ப தும், பணத்துக்கும், விளம்பரத்துக்கும் ஆசைப்பட்டுத்தான் அப்படி எழுதிக் கொடுத்தார் என்பதும் ராதாராணிக்குத் தெரியாது.

# நிஜமாக நடந்தது!

**போன** ஞாயிற்றுக்கிழமை நான் யார் முகத்தில் விழித்தேனே தெரியவில்லை, எழுந்ததும் எழாததுமாய்ச் சரசுவுடன் சண்டை ஆரம்பித்து விட்டது.

வெகு அல்பமான காரணத்துக்காகத்தான் அந்தச் சண்டை. வழக்கமாக நான் போடும் காப்பிச் சண்டை தான் அன்று பிரமாதமாக ஆகிவிட்டது.

முதல் நாள் ஒரு தமிழ் டாக்கி பார்க்க வேண்டி ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் ராத்திரி முழுவதும் சரியான தூக்கம் இல்லாமல் அன்று காலை சற்றுத் தலை வலியோடு தான் எழுந்திருந்தேன். சரசுவும் என்னோடு டாக்கிக்கு வந்திருந்தாளாதலால் அவளுக்கும் தலைவலி, கிலைவலி ஏற்பட்டிருந்ததோ என்னமோ வழக்கத்தை விடச் சற்று இன்னும் மோசமாகவே காப்பி போட்டிருந்தாள்.

முதலில் தலைவலி. இரண்டாவது காப்பி நன்றாயில்லை. இந்த இரண்டு காரணங்களுக்காகவே அஹிம்சா முறைகள், சாத்வீக எதிர்ப்புகள், தன்னடக்கம் முதலிய முறைகள் பழகாத எவருக்கும் கோபம் வருவது இயற்கை. இதோடு சரசு போடும் காப்பிக்காக ஆபீஸில் நான் பட்டிருக்கும் அவமானங்களை நினைத்துப் பார்த்தபோது, நான் கொண்ட கோபம் கொஞ்ச நஞ்சமல்ல.

தினம் சரசு எனக்குக் காப்பியைத் தர்மாஸ் பிளாஸ்க்கில் போட்டுக் கொடுத்து ஆபீசுக்கு எடுத்துக் கொண்டு போகச் சொல்வது வழக்கம். ஆனல் இந்த மாதிரி நான் எடுத்துக் கொண்டு போகும் காப்பி எனக்கு ஒரு வாய் கிடைத்தால் அதிகம். என் ஆபீஸிலுள்ள சகாக்கள் வெகு தாராளமாய் என்னைக் கேட்காமலே என் தர்மாஸ் பிளாஸ்க்கி லிருக்கும் காப்பியை யெல்லாம் ஆளுக்குக் கொஞ்சமாக ஊற்றிக்கொண்டு அதன் குணதிசயங்களைப் பற்றி ஆளுக்கொரு குட்டிப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

"காப்பிக் கொட்டை அணுவுக்கு எத்தனை வீசை?" என்பார் ஒருவர்.

"ஏது, சர்க்கரை ஏதாவது இலவசமாகக் கிடைக்கிறதா?" என்று கேட்பார் இன்னொருவர்.

"ஏன் இன்றைக்குப் பால்காரன் வரவில்லையோ?" என்று கவலையாக விசாரிப்பார் இன்னொரு ஆசாமி.

இதெல்லாம் ஞாபகம் வந்ததும் எனக்கு வந்த கோபம் கொஞ்ச நஞ்சமல்ல. சரசுவைப் பார்த்து, "இது என்ன கழுநீர்த் தண்ணி! இதற்குக் காப்பி என்று பெயரா?" என்று சற்று நாலு கட்டை சுருதியிலேயே கேட்டேன்.

"ஏன்! இப்படித் துசுக்கு சொல்லுகிறவர்களெல்லாம் காலமே எழுந்து காப்பி போடுகிறதுதானே!" என்று வந்த பதில் என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

"ஆமாண்டியம்மா. உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்டதற்கு நான் தினம் காலையில் எழுந்து காப்பி

போடுகிறது ஒன்றுதான் பாக்கி. நான் காப்பி போடுவதானல் நீ என்னத்திற்கு இங்கு இருக்கிருய்?"

"ஏன், என்னைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு நீங்கள் என்ன குறைந்து போய் விட்டீர்கள்? எனக்கு என்ன அழகில்லையா, குணமில்லையா, எங்கப்பா, அம்மா எனக்குச் சீர் செனத்திகள் செய்யவில்லையா?"

"ரொம்ப அழகாயிருக்கு! பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணுகிற வயசாச்சு. இப்பத்தான் உன் சீர், செனத்திகளை ஞாபகப் படுத்திப் பெருமை யடித்துக்கொள்ளு."

"ஏன் பெருமையடித்துக் கொள்ள மாட்டேன்? எங்கப்பா, அம்மா உங்களுக்கு என்ன குறைச்சலாகச் செய்தார்கள்? ஆடிக்குக் கூப்பிடவில்லையா? தீபாவளிக்குக் கூப்பிடவில்லையா? ஒவ்வொரு ஆவணி அவிட்டத்துக்கும் பணம் அனுப்ப வில்லையா? கலியாணமானதி லிருந்து ஒரு தீபாவளிக்காவது உங்களை அழைக்காமல் இருந்ததில்லை. நாளைக்கு உங்க பெண்ணுக்குச் செய்யப் போகிறீர்களே, நானும் பார்க்கப் போகிறேனே!"

"எனக்குப் பெண் என்ருல் உனக்கு என்று இல்லையோ?....இந்தா இந்த வீண் வார்த்தையெல்லாம் எதற்கு? காப்பி ஏன் நன்ருயில்லை யென்ருல் என்னமோ சீர் செனத்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டாயே? இந்தா, இந்தக் காப்பியை நீயே வைத்துக்கொள்" என்று காப்பி டம்ளரை மேஜையிலிருந்து தட்டி விட்டேன். காப்பியெல்லாம் கீழே கொட்டிற்று.

சரசு பதில் பேச வில்லை. பேசாமல் டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் போய்க் கதவைத் தாளிட்டுக் கொண்டாள்.

கதவு 'டப்' என்று சாத்தப்பட்டதுடன் என்னுடைய கோபமும் 'பட்' என்று பறந்தது. இவ்வளவு சின்ன விஷயத்துக்காகச் சரசுவை இவ்வளவு கோபித்துக் கொண்டு விட்டோமே யென்று வருத்தப்பட்டேன்.

சரசு கோபித்துக் கொண்டுபோய் ஒரு மணி நேரமாகியும் அவளிடமிருந்து மூச்சுப் பேச்சைக் காணோம். இதற்குள் என் மனது அவளுக்காக மிகவும் பச்சாத்தாபப் பட்டு, நான் அவளைக் கோபித்துக் கொண்டதற்காக என்னைக் கடிந்து கொண்டது. "போய் உடனே மன்னிப்புக் கேள்" என்றது.

ஆனால் "நான் காப்பி சரியாகப்போடாதது தப்பிதம்" என்று அவள்தான் முன்னால் வந்து சொல்லட்டுமே யென்று எனக்கு.

ஆனால் மனது கேட்காதபடியால் வெட்கத்தை விட்டு "சரசு, சரசு" என்று இரண்டு குரல் கூப்பிட்டுப் பார்த்தேன். பதிலில்லை. உட்கார்ந்திருந்த இடத்தைவிட்டு எழுந்து போய்ச் சமையல் அறைக் கதவைத் தட்டியும் பார்த்தேன். ஊஹூம். பதிலில்லை. இந்தப் பெண்களுக்கிருக்கிற ஸாதஸம் கொஞ்சம் நஞ்சமில்லை.

எனக்கு என்ன பண்ணுவது என்று தெரியவில்லை. இந்த மாதிரி சமயங்களில் கதை, நாடகம் முதலியவைகளில் வரும் கதா நாயகர்கள் என்ன பண்ணுகிறார்கள் என்றெல்லாம் என் மனக்கண் முன் வந்து நின்றது. நான்

பார்த்திருக்கும் தமிழ் நாடகங்கள், நான் வாசித்திருக்கும் இங்கிலீஷ் நாடகங்கள் எல்லாம் என் ஞாபகத்துக்கு வந்தன. கடைசியில் சத்தியபாமா கதை ஞாபகத்துக்கு வந்ததும் "காமி சத்தியபாமா கதவைத் திறவாய்" என்று பாடலாமா வென்று தோன்றியது. 'சத்தியபாமா' என்பது என் மனைவியின் பெயர் இல்லாவிட்டாலும், இந்தப் பாட்டைப் பாடினுள் அவள் அர்த்தம் புரிந்து கொள்வாள் என்று தெரியும்.

ஆனல் எனக்குப் பாடத் தெரியாதே? அதற்காக நான் என் கிராமபோன் பெட்டியைத் திறந்து, "காமி சத்தியபாமா, கதவைத் திறவாய்' என்னும் பிளேட்டை எடுத்து வைத்தேன். அவ்வளவுதான். "திறவாய், திறவாய், கதவைத் திறவாய்" என்று பிளேட் சங்கதிகள் பலமாகப் போட்டுப் பாட ஆரம்பித்தது. ஆனல் கதவு திறந்தபாடில்லை. பிளேட் சப்தம் கேட்டதும் பக்கத்து வீட்டுக் குழந்தைகள் எல்லாரும் "மாமா பாட்டு வைக்கிறர்" என்று கத்திக்கொண்டு ஓடி வந்து என்னைச் சூழ்ந்து கொண்டன.

கிராமபோன் பாட்டினல் பிரயோசனம் இல்லை யென்று கண்டதும் நான் பெட்டியை மூடப் போனேன். ஆனல் என்னைச் சுற்றியிருந்த குழந்தைகள் எல்லாம் "மாமா, இதே பிளேட்டைத் திரும்பவும் வைங்கோ, மாமா! ரொம்ப நன்ருயிருக்கிறது, மாமா!" என்றதுகள். இதுவும் நல்லதுக்குத்தான் என்று அதே பிளேட்டைத் திரும்பவும் வைத்தேன். சமையல் அறைக் கதவு தாழ்ப்பாள் எடுக்கப்படும் சப்தம் கேட்டது. ஆனல் கதவைத்

திரும்பவும் சடக்கென்று தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு விட்டாள்.

நான் சலிப்புடன் என் ஈஸி சேரில் போய்ச் சாய்ந்தேன். இதைவிட இன்னும் எவ்வளவோ தர்ம சங்கடமான நிலைமைகளையெல்லாம் பழையகாலத்துக் காதலர்கள் சமாளித்து இருக்கும்போது என்னால் இதைச் சமாளிக்க முடியவில்லையே என்று யோசித்தேன்;

இப்படி ஏதோ பல பல யோசித்துக் கொண்டிருந்த போது சரசு என் மனைவி என்ற எண்ணம் மறந்து போய் சரசு என் காதலி என்ற எண்ணம் எஞ்சி நின்றது. என் காதலியின் காதலைத் திரும்பப் பெறுவதற்கு ஏதாவது செய்ய வேண்டுமென்று தோன்றிற்று.

பழைய காலத்துக் காதலியா யிருந்தால் எங்கேயாவது தனியாகக் காட்டில் நின்று பூக்கொய்து கொண்டிருப்பாள். காதலன் அந்தப் பக்கம் வரும் சமயம் பார்த்து ஏதாவது புலியோ, சிறுத்தையோ காதலியின்மீது பாய ஆரம்பிக்கும். காதலனைக் கண்டதும் புலியோ, சிறுத்தையோ காதலியை விட்டு விட்டுப் போய்விடும். அப்பொழுது காதலன் காதலியைப் பார்த்து,

"எந்த ஊரு, எந்த தேசம் பெண்ணே
எந்தனுக்கு எடுத்துரைப்பாய் கண்ணே"

என்று தன் காதல் நாடகத்தை ஆரம்பிப்பான்.

ஆனால் சரசு காட்டில் இல்லாமல் சமையல் அறையில் அல்லவா உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்! எனக்கு என்ன பண்ணுவது என்று தெரியாமல் என் மனது எதை எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தது.......

ஒரு சமயலறை. அதில் ஒரு பெண் தன்னந்தனியே நின்று காரியம் செய்து கொண்டிருக்கிருள். அந்தச் சமையலறையில் என்னென்ன ஆபத்துக்கள்? காப்பி டிகாக்ஷன் போடும்போது வெந்நீர் ஜலம் பட்டால் போதும். அடுப்புப் பற்றவைப்பதற்காக நெருப்புக் குச்சி கிழிக்கும்போது அது கையைச் சுட்டு விட்டாலும் போதும். இல்லாவிடில் அடுப்பு சரியாக எரியாமல் அதன் புகை கண்ணில் பட்டு, நீலோத்பல மலர்களை யொத்த கண்களினின்றும் கண்ணீர் வந்தாலும்போதும். இல்லா விடில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு உயரப் பலகை யில் இருக்கும் பாத்திரங்களை எடுக்கும்போது கீழே வழுக்கி விழுந்தாலும் போதும். குனிந்து குனிந்து வேலை செய்யும்போது அந்தப் பின்னல் முன்னல், முன்னல் வந்து விழுந்து இடைஞ்சலை யுண்டாக்கலாம். இத்தனை ஆபத்துக் களுக் கிடையில் ஒரு அபலையை தன்னந் தனியே விட்டு விட்டுக் கணவன் இன்னொரு அறையில் தன் ஆபீஸ் கடிதங் களை வைத்துப் பார்த்துக்கொண்டு சுகமாக வீற்றிருக் கிருன்!

திடீரென்று அந்தப் பெண் ஏன் இப்படி மிரண்டு, மிரண்டு பார்க்கிருள்? அதோ தூரத்தில் அது என்ன அது? பார்க்க பயங்கரமாக இருக்கிறதே. ஆம். இவளை நோக் கியேதான் வந்து கொண்டிருக்கிறது. ஆ! இதோ அவள் ஒரு மூலைக்கு ஒடுகிருள். அது இவளைப் பின் தொடர் கிறது. இதோ, இன்னொரு மூலைக்கு ஓடுகிருள். அந்த மூலைக்கும் அது அவளைப் பின் தொடர்கிறது. ஐயோ! ஈசா! அவளை இந்த க்ஷணத்தில் காப்பாற்றுவது யார்? அதோ, அதோ, அதோ, அந்த கரப்பான் பூச்சி அவளுக்கு

வெகு சமீபத்தில் வந்து விட்டதே! "ஹா!" என்ற இரைச்சல்!........

இந்த சமயத்தில் என்னுடைய சிந்தனை கலைந்தது. சமையலறையி லிருந்து நிஜமாகவே கூச்சல் கேட்டது. கதவைத் திறந்துகொண்டு சரசு வெளியே ஓடி வந்து "ஐயோ கரப்பான் பூச்சி, கரப்பான் பூச்சி" என்று கத்தி என்னைக் கட்டிக்கொண்டாள். இவ்வளவு நல்ல சந்தர்ப் பத்தை நான் நழுவ விடுவேனா? உடனே சமையலறைக் குள் ஓடிச்சென்று அந்தக் கரப்பான் பூச்சியை யெடுத்து வெளியில் விட்டு, சரசுவை ஒரு பெரிய ஆபத்தினின்றும் காப்பாற்றினேன்.

நான் கரப்பான் பூச்சியை எடுத்து வெளியில் விட்டு வந்ததும் சரசு என்னைப் பார்த்துக் கலகல வென்று சிரித் தாள்.

"என் சிரிக்கிறாய்! என்ன சமாசாரம்?" என்றேன்.

"இல்லை. நேற்று ஒரு கதை வாசித்தேன். அதில் ஒரு பெண் கரப்பான் பூச்சியைக் கண்டு பயப்படுவது போலவும், அவள் புருஷன் அவளைக் காப்பாற்றுவது போலவும் எழுதி யிருந்தது. அது நம்ம வீட்டில் நிஜமா கவே நடந்துவிட்டதை நினைத்துப் பார்த்தபோதுதான் எனக்குச் சிரிப்பாய் வந்தது" என்றாள்.

"ஐயையோ! அதே கதையை நானும்தான் நேற்று வாசித்தேன்" என்று நானும் சிரித்தேன்.

# அதிசயக் கடிதங்கள்

டாக்டர் யமபயங்கர முதலியாருக்கு நடுத் தெரு நாலாம் நம்பர் வீட்டிலிருக்கும் "நாடோடி" எழுதுவது

ஐயா,

நான் சென்ற மாதம் உங்களைக் கண்டு என் உடம்பு மிகவும் பலஹீனமா யிருக்கிறதென்றும், நின்றால் நிற்க முடியவில்லை யென்றும், உட்கார்ந்தால் உட்கார முடிய வில்லை யென்றும், ஏதாவது மருந்து கொடுக்க வேண்டு மென்றும் கேட்டேன். நீங்கள் ஏதோ ஒரு புட்டி மாத் திரைகள் கொடுத்து, அதைத் தினம் மூன்று வேளை கால் படி சுயம் பசும் பாலில் கலந்து சாப்பிட வேண்டுமென்று சொன்னீர்கள். நீங்கள் சொன்னதற்காக ஒரு பசு மாட்டை விலைக்கு வாங்கிக் கட்டிக்கொண்டு நீங்கள் சொன்னபடியே சாப்பிட்டுக்கொண்டு வந்தேன். இப் பொழுது என் உடம்பு மிகவும் குணமாகி விட்டது. நின் றால் நிற்க முடிகிறது; உட்கார்ந்தால் உட்கார முடிகிறது. முன்பு 93 பவுண்டு எடை இருந்தவன் இப்பொழுது 187 பவுண்டு இருக்கிறேன். ஆனால் நீங்கள் சொன்ன முறை யில் ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் மறந்து விட்டேன். பாலில் உங்கள் மாத்திரைகளைக் கலந்து சாப்பிட மறந்தே போய்விட்டேன். அந்த மாத்திரைகள் அப்படியே பிரிக்

காமல் இருக்கின்றன. அவற்றை என்ன பண்ணுவது என்று உடனே தெரிவிக்கவும்.

இப்படிக்கு,

"நாடோடி"

---

நீலகிரி டிங்டங் காப்பிக்கோட்டை கம்பெனியாருக்கு ஹோட்டல் அண்ணாஜி ராவ் எழுதுவது

ஐயா,

தங்கள் காப்பிக்கொட்டை இரண்டு பெரிய பைகளில் வந்து சேர்ந்தது. அதைப்பற்றி இங்குள்ள சில கடைக்காரர்கள் மிகவும் தாழ்வாகப் பேசிக் கொள்ளுகிறார்கள். ஆனால் உங்கள் காப்பிக் கொட்டையைப்போல் ஹோட்டல்காரர்களுக்குச் சௌகரியமானது, உபயோகமானது, லாபகரமானது வேறொன்றும் இராது என்று இந்தக் காப்பிக் கொட்டைப் பொடியைக் கொண்டு போட்ட காப்பியைக் குடித்துக்கொண்டே சத்தியம் பண்ணுவேன்.

உங்கள் காப்பிக் கொட்டையை வறுத்துப் பொடி பண்ணி, டிகாக்ஷன் இறக்கி, பாலில் கலந்து, சர்க்கரையும் சேர்த்துச் சாப்பிட்ட பிறகு தான் அதன் அருமை தெரிந்தது. அதைக் குடித்துப் பார்த்தால் காப்பிபோலும் ருசி கொடுக்கிறது, டீ போலும் ருசி கொடுக்கிறது. ஆகையால் எங்கள் ஹோட்டலுக்கு வருகிறவர்கள் காப்பி கேட்டாலும் சரி, அல்லது டீ கேட்டாலும் சரி, அல்லது இரண்டும் கேட்டாலும் சரி, நாங்கள் இதையே தான் கொடுக்கிறோம். அவர்களும் திருப்தியுடனேயே சாப்பிட்டு விட்டுப் போகிறார்கள். நேற்று ஒருவருக்கு அதைக் கொடுத்தபோது,

"கோக்கோ ரொம்ப பேஷ்!" என்று சொல்லிச் சிலாகித்தார். ஆகையால் இதே காப்பிக் கொட்டை இன்னும் இரண்டு பை அனுப்பி வைக்கவும்.

இப்படிக்கு,

அண்ணாஜி ராவ்.

---

சூளை யிருக்கத் தோல் முழுங்கி இன்ஷியூரன்ஸ் கம்பெனி மானேஜருக்கு முனியாண்டி முதலியார் மனைவி மூக்கம்மாள் எழுதுவது

ஐயா,

என்னுடைய புருஷர் தங்கள் கம்பெனியில் இன்ஷியூர் செய்து கொண்டிருந்தார். அவர் உள்ள மட்டும் அவர் கட்டணம் தவறாது செலுத்திக் கொண்டு வந்தார். அவர் இறந்து பத்து வருஷங்களாகியும் நானும் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் கட்டணம் செலுத்திக் கொண்டே வந்திருக்கிறேன். தாங்களும் ரசீது அனுப்பி வந்திருக்கிறீர்கள். இனிமேல் கட்டணம் செலுத்துவது எனக்குக் கஷ்டமா யிருக்கிறபடியால் என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். எதற்காக அவர் தாமும் கட்டணம் கட்டிவிட்டு என்னையும் கட்டும்படி வைத்து விட்டுப் போய்விட்டார் என்று எனக்குத் தெரியவில்லை அவர் இருந்தாலாவது கேட்பேன். அவர் இறந்துதான் பத்து வருஷங்கள் ஆய்விட்டனவே! ஆகையால் கட்டணம் கட்டும்படி இனிமேல் எனக்கு நோட்டீஸ் அனுப்ப மாட்டீர்கள் என்று நம்பும்,

மூக்கம்மாள்.

---

லோட லோட்டை மோட்டார் கம்பெனியாருக்கு தடபுடல் தாமோதரம் நாயுடு எழுதுவது

ஐயா,

தங்களிடம் நான் மோட்டார் ஒன்று போன மாதம் வாங்கினது ஞாபக மிருக்கலாம். இந்த ஒரு மாதத்திற்குள் இந்தப் பட்டணத்தில் என் மோட்டாரைப் பற்றித் தெரிந்து கொள்ளாதவர் ஒருவர் கிடையாது. யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்று சொல்வார்களே, அதெல்லாம் பொய். என் மோட்டார் வரும் பின்னே, அதன் சத்தம் வரும் முன்னே என்பதுதான் மெய். என்னுடைய மோட்டார் வந்தால் அது வருவதற்கு ஒரு மைலுக்கு முன்னாலேயே அதன் சத்தம் நன்றாகக் கேட்கும். என்னுடைய மோட்டாரில் சப்தம் போடாத பாகம் ஒன்றும் கிடையாது—அதன் ஹாரனைத் தவிர. ஹாரன் சரியாக ஊதவில்லையே யென்று நான் இதுவரை குறைப் பட்டது கிடையாது. மோட்டார் முழுவதும் சப்தம் பண்ணும்போது ஹாரன் சப்தம் போடாவிட்டால் என்ன மோசம் என்று கேட்கிறேன்? இது தெரியாமல் "ஏன் ஊதாத ஹாரனை வைத்துக் கொண்டிருக்கிறாய்?" என்று போலீஸ்காரன் என்னைப் பிடித்துக் கொண்டு விட்டான்! ஆகையால் உடனே சரியாக ஊதும் ஹாரன் ஒன்று அனுப்பவும். இல்லாவிடில் உம்முடைய மோட்டாரைத் திருப்பி வாங்கிக் கொள்ளவும்.

இப்படிக்கு,

தடபுடல் தாமோதரம் நாயுடு.

அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருக்கு நடுத்தெரு நாலாம் நம்பர் வீட்டிலிருக்கும் "நாடோடி" எழுதுவது

ஐயா,

தாங்கள் என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு போன சைகிளைத் திரும்பப் பெற்றுக் கொண்டேன். நான் வெளியிலிருந்து திரும்பி வந்ததும், கூடத்தில் ஏதோ ஒரு புது மாதிரியான வஸ்து வைக்கப்பட்டிருந்தது. ஏதோ பழைய இரும்பு சாமான்தான் என் மனைவி விலைக்குப் போடுவதற்காக எடுத்து வைத்திருக்கிருளோ என்று நினைத்தேன். பிறகு விசாரித்ததில் அது என்னுடைய சைகிள் என்று தெரிய வந்தது. எனக்கு என்னமோ என் கற்பனு சக்தியை எவ்வளவு உபயோகப்படுத்தியும், அது என் சைகிள்தான் என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. ஏனெனில் நான் அதிலுள்ள இரும்புத் துண்டங்களை என்ன கூர்ந்து கவனித்தும், "இது ஒரு காலத்தில் சைகிள் சக்கரமா யிருந்திருக்க வேண்டும்" என்று சொல்லக்கூடிய வஸ்து ஒன்றுகூடத் தென்பட இல்லை. எது எப்படிப் போனுலும் பரவாயில்லை யென்று பேசாமல் இருந்து விடுவேன். ஆனுல் நான் சைகிளுடன் கொடுத்த—பழுது பார்க்க அத்தியாவசியமான—அந்த 'ஸ்பேனர்' மாத்திரம் திரும்பி வரவேயில்லை. அதைப்போல் 'ஸ்பேனர்' இந்த இராஜதானியிலேயே கிடைக்காது. இதுவரையில் நான் எத்தனையோ சைகிள்கள் வாங்கி உடைந்து போய்விட்டன—இந்த மாதிரி இரவல் கொடுத்ததால். ஆனுல் 'ஸ்பேனர்' மாத்திரம் ஒரு பொழுதும் உடைந்ததில்லை.

ஆகையால் தயவுசெய்து இந்தக் குப்பை கூளத்தைத் திருப்பி வேண்டுமானாலும் வாங்கிக்கொண்டு என் 'ஸ்பேன'ரை மாத்திரம் திருப்பிக் கொடுத்து விடுங்கள்.

இப்படிக்கு,

"நாடோடி"

# சதிபதிகளுக்கு மாத்திரம்

மேலே போட்டிருக்கும் தலைப்பைப் பார்த்தால் ஏதோ நான் சதிபதிகளை மாத்திரந்தான் இந்தக் கட்டுரையை வாசிக்கச் சொல்வதாகவும், மற்றப் பேர் வாசிக்கக்கூடாது என்று சொல்வது போலவும் தானே தோன்றுகிறது? ஆனால் உண்மை அதுவல்ல.

இரண்டு வருடங்களுக்கு முன்னர் யாராவது இது மாதிரி தலைப்புப் போட்டுக் கட்டுரை எழுதி யிருந்தால் நான் என்ன பண்ணி யிருப்பேன் தெரியுமா? எனக்கு வந்த கோபத்தில் அந்தக் கட்டுரையை, நூறு, ஆயிரம், லட்சம்..........ஆம், லட்சம் தடவை வாசித்துத் தீர்த்திருப் பேன். ஏனெனில் இரண்டு வருஷங்களுக்கு முன்னர் நான் பிரம்மசாரியாகத்தா னிருந்தேன்.

தப்பெல்லாம் அந்தத் தலைப்பின் மேல்தான். அது நானாகப் போட்டுக்கொண்ட தலைப்பல்ல. இது வேறு யாரோ ஒரு புண்யாத்மா தாம் எழுதிய புஸ்தகத்திற்குப் போட்டுக் கொண்டிருக்கும் தலைப்பு. இங்கே நான் சொல்லப்போகும் விஷயங்களுக்கும், அந்தப் புஸ்தகத்திற் கும் அதிக தொடர்பு இருப்பதினால், அந்தப் புஸ்தகத்தின் தலைப்பையே என் கட்டுரைக்கும் தலைப்பாகப் போட்டு வைத்தேன்.

"சதிபதிகளுக்கு மாத்திரம்" என்னும் புஸ்தகத்தைப் பற்றி எண்ணிச் சில வார்த்தைகள் சொல்கிறேன். (நீங்களே எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம்) அது ஒரு காம சாஸ்திர புஸ்தகம் அல்ல. யானைக்கும் பூனைக்கும் எவ்வளவு தூரமோ, இல்லை, பூமிக்கும் சூரியனுக்கும் எவ்வளவு தூரமோ (ஏனென்றால், யானையும் பூனையும் ஒன்றின் பக்கத்தில் ஒன்று நின்று விட்டால்?) அவ்வளவு தூரம் இந்தப் புஸ்தகத்திற்கும், காமசாஸ்திரங்களுக்கும். இந்தப் புஸ்தகத்தில் புருஷன் மனைவியுடன் நடந்து கொள்ள வேண்டிய விதத்தைப்பற்றியும், மனைவி புருஷனுடன் நடந்து கொள்ள வேண்டிய விதத்தைப் பற்றியும் அநேக அரிய பெரிய விஷயங்கள் விளக்கப் பட்டிருந்தன. அதோடு கூட எந்த விஷயத்தையும், ஏதாவது சந்தேகம் தோன்றினால், எடுத்துப் பார்ப்பதற்காக, புஸ்தகத்திற்குப் பின்னால் விஷய சூசிகை யொன்றும் அகராதி ரீதியில் சேர்க்கப்பட்டிருந்தது.

நான் இந்தப் புஸ்தகம் வாங்குவதற்குமுன் என் மனைவியுடன் ஏதோ காமா சோமாவென்று வாழ்க்கை நடத்திக்கொண்டு வந்தேன். இருந்தாலும் நாவல்களிலும், கதைகளிலும், டாக்கிகளிலும், நாடகங்களிலும் நாம் பார்க்கும் இலட்சிய தம்பதிகளைப்போல் நாங்கள் இருக்கவில்லை யென்பது உண்மைதான். அடிக்கடி எங்களுக்குள் சண்டை ஏற்படும். காரணம் ஒன்று வேண்டுமென்ற அவசியம்கூட இல்லை. சண்டை திடீரென்று எதிலாவது ஆரம்பித்து எதிலாவது போய் முடியும். சண்டையில்லாமல் சௌஜன்யமா யிருக்க வேண்டுமென்று எங்கள் இரண்டு பேருக்கும் ஆசைதான். ஆனால் நாங்கள் அதை

வெளியில் சொல்லிக் கொண்டால்தானே ஒருவர் மனது ஒருவருக்குத் தெரியும்? எனக்குச் சண்டைக்கெல்லாம் காரணம் என் மனைவி தான் என்று எண்ணம். ஆனால் என் மனைவியைக் கேட்டால் நான்தான் காரணம் என்று சொல்வாள். இந்தத் தகராறைத் தீர்க்க, யாரிடம் போய் மத்தியஸ்தம்கேட்பது? வீட்டுச் சண்டையை வீட்டைவிட்டு வெளியில் கொண்டு போனால் வெட்கக் கேடு. "என்னய்யா! புருஷன் - பெண்டாட்டி சண்டை சகஜம்தானே? என்னமோ இதைப் பிரமாதமாக மத்தியஸ்தத்திற்குக் கொண்டுவந்து விட்டீர்களே! இரண்டு கை தட்டினால் தானே ஓசை? நீர்தான் சற்றுத் தணிந்து போமே! எல்லார் வீட்டிலும் அப்படித்தான் ஐயா!" என்பார்கள். நிற்க.

புஸ்தகம் வாங்கினதும் என் மனைவியைக் கூப்பிட்டுப் புஸ்தகத்தைக் கொடுத்தேன். அவள் ஏடுகளைப் புரட்டிப் பார்த்துவிட்டு என்னைப் பார்த்து விழித்தாள். "இதோ பார், ஐந்து ரூபாய் செலவழித்துப் புஸ்தகம் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன். நாம் இருவரும் இனிமேல் எலியும் பூனையும் போல் சண்டை போட்டுக் கொள்வது நன்றாயில்லை. இந்தப் புஸ்தகத்தில் சொன்னபடி நாம் நடந்துகொண்டு வந்தோமானால், பூவும் மணமும் போலும், நகமும் சதையும் போலும் அன்னியோன்னியமாக இருக்கலாம். இனிமேல் இந்தப் புஸ்தகம்தான் நமக்கு நியாயாதிபதி. நமக்குள் என்ன சச்சரவு தோன்றினாலும், இந்தப் புஸ்தகத்தில் சொன்னபடி நடந்துகொள்ள வேண்டும். சரிதானே?" என்றேன்.

"சரிதான். நீங்களும் அதுமாதிரி நடந்துகொள்ள வேண்டும். சரிதானே?" என்ருள்.

"நடக்காமலா? நடக்கத்தான் புஸ்தகம் வாங்கினேன்" என்றேன். புஸ்தகத்தை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு என் மனைவி சமையலறைக்குள் நுழைந்து விட்டாள்.

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை. லீவு நாள். அன்றி லிருந்துதான் புத்தகத்தின்படி நடப்பது என்று தீர்மானித் திருந்தேன். காலை 7-30 மணியிருக்கும். பத்திரிகை வாசித்துக் கொண்டிருந்தேன். வழக்கமாக 7-மணிக்கு வரும் காப்பி அன்று 7-30-க்குத்தான் வந்தது. இதற்குள் "காப்பி எங்கே?" "காப்பி எங்கே?" என்று நான் 29 தடவை கேட்டாய்விட்டது. கடைசியில் காப்பி வந்த தும் குடிக்கலாமென்று எடுத்தால் அது ஜில்லென்று இருந்தது.

"இது என்ன, காப்பி ஜில்லென்று இருக்கிறது? சூடாகக் கொண்டு வருவதற்கு என்ன கேடு?"

"ஜில்லென்று இருக்கா?"

"ஜில்லென்று இருக்கு என்று சொன்னல் 'ஜில் லென்று இருக்கா?' என்று கேட்கிருயா?"

மனைவியின் பதில்.

என்னுடைய பதில்.

மனைவியின் பதில்.

என்னுடைய பதில்.

இந்த மாதிரி என் மனைவி பதில் சொல்ல, நான் பதில் சொல்ல எங்களிருவருக்கும் வாக்குவாதம் முற்றிக் கொண்டு போயிற்று. புருஷன் - மனைவி சண்டை வெளிக் குத் தெரியக் கூடாதாதலால் என் மனைவி சொன்ன பதில்க ளையும் நான் சொன்ன பதில்களையும் அச்சிடவில்லை. அதோடுகூட என் மனைவி அவளுக்கு உண்டான கோபத் திலும், ஆத்திரத்திலும், இலக்கணத்தைக் கவனிக்காமலே பேசினாள்.

கோப காலங்களில் இந்த மாதிரியான இலக் கணப் பிழைகளை என் மனைவி செய்கிறாள் என்று வெளியில் சொல்லி, அவளை அவமானப் படுத்த எனக்கு இஷ்டமில்லை. வாக்கு வாதம் இப்படியே வளர்ந்து கொண்டு போய்க் கடைசியில் 137-வது தடவையாக என்னுடைய பதில் வந்தது. இதற்கு என் மனைவி கொடுத்த பதில், சமைய லறைக்குப் போய், "சதிபதிகளுக்கு மாத்திரம்" என்னும் புஸ்தகத்தை எடுத்துக் கொண்டுவந்து அதை என் கையில் கொடுத்தது தான். அடடடடடடடடடா! இந்தப் புஸ்த கம் வாங்கினதை மறந்து போய் ஒரு மணி நேரமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்து விட்டோமே யென்று நினைத்து வருத்தப்பட்டேன். சண்டையைத் தீர்த்து வைப்பதற்காக அல்லவா இந்தப் புஸ்தகம் வாங்கினது?

'காப்பி' என்னும் வார்த்தையை எடுப்பதற்காக விஷய சூசிகையைப் புரட்டுவதற்குள் என் மனைவி "பக்கம் 57" என்றாள். அவளை முறைத்துப் பார்த்து விட்டு 57-ம் பக்கத்தைத் திருப்பினேன். என்ன ஆச்சரியம்! 'காப்பி' யென்ற வார்த்தை அந்தப் பக்கத்தில்தான் இருந்தது! அதில் கண்டிருந்த விஷயம்:

காப்பி:—இதைத் தாராளமாக தம்பதிகள் இருவரும் சாப்பிடலாம். இதைச் சூடாயும் குடிக்கலாம், ஆறவைத்தும் குடிக்கலாம். சூடாகவோ, ஆறவைத்தோ, சௌகரியம் போல், மனைவி தினம் புருஷனுக்குக் காலை 7-30 மணிக்கும் சாயந்திரம் 5-30 மணிக்கும் கொடுக்க வேண்டியது.

"ஆம், என்ன போட்டிருக்கிறது? உன்னை ஆறின காப்பி கொடு என்றா எழுதியிருக்கிறது? சௌகரியம் போல் என்று போட்டிருக்கிறது. என் சௌகரியம் சூடான காப்பி தான்"

"சௌகரியம் போல்! என் சௌகரியம் ஆறின காப்பிதான்."

"யார் சௌகரியம்! உன் சௌகரியமா?"

"யார் சௌகரியம்! உங்கள் சௌகரியமா?"

"யார் சௌகரியம்! உன் சௌகரியமா?"

"யார் சௌகரியம்! உங்கள் சௌகரியமா?"

நான் 87 தடவை "யார் சௌகரியம்! உன் சௌகரியமா?" என்று சொல்லியாய் விட்டது. என் மனைவியும் அதற்குப் பதிலாக 87 தடவை "யார் சௌகரியம்! உங்கள் சௌகரியமா?" என்று கேட்டாய் விட்டது. மணியோ 9-30 ஆகிவிட்டது. இந்த மாதிரியே கேட்டுக் கொண்டு போனால், யுகாந்தரம் வரையில் கேட்டுக் கொண்டிருக்க வேண்டியது தான் என்று தீர்மானித்து, "ஏன் இந்த மாதிரி விதண்டா வாதம் பண்ணுகிறாய்? புஸ்தகத்தில் உன்னை இதுமாதிரி விதண்டா வாதம் பண்ணச் சொல்லியிருக்கிறதா?" என்று கேட்டுவிட்டு, 'விதண்டா வாதம்'

என்னும் வார்த்தையை அந்தப் புஸ்தகத்தில் எடுத்துப் பார்க்க வேண்டுமென்று நினைத்தேன்.

நான் நினைத்ததுதான் தாமதம். என் மனைவி என் மனதிலுள்ளதை அறிந்தவள் போல, "பக்கம் 131' என்ருள். பக்கம் 131-ஐப் புரட்டி எடுத்தேன். அந்தப் பக்கத்தில் 'விதண்டா வாதம்' என்கிற வார்த்தை என் கண்களை உறுத்தும்படி இருந்தது. ஓகோ! சமையலறையில் இருந்து கொண்டே எல்லா வார்த்தைகளையும் புரட்டிப் பார்த்தாய் விட்டது போலும்!

**விதண்டா வாதம்** :—இதையே குதர்க்க வாதம் என்றும் சொல்லலாம். சமயா சமயங்களில் மனைவி விதண்டா வாதம் பண்ணுவாளாயின் புருஷன் விட்டுப் பிடிக்க வேண்டியதுதான் தான். மனைவிக்கும் இதே வார்த்தை.

"பார், என்ன போட்டிருக்கிறது என்று. மனைவிக்கும் இதே வார்த்தை. அப்படியானல் நீ தான் விட்டுப் பிடிக்க வேண்டும்."

"அப்படியானல் நீங்கள்தானே விதண்டா வாதம் பண்ணுகிறீர்கள், நான் விட்டுப் பிடிக்க!"

"இல்லையென்ருல் நீதான் விதண்டாவாதம் பண்ணுகிருய்."

"சரி, புத்தகத்தில் சொன்னபடி நீங்கள்தான் விட்டுப் பிடியுங்களேன்."

"ஏன் நீதான் விட்டுப் பிடியேன்."

"அப்படியானல் நீங்கள்தான் விதண்டா வாதம் பண்ணுகிறீர்களா!"

காப்பி குடிக்காமல் தலைவலி வேறு. அதோடு கூட கேள்விகள் இந்த மாதிரி திருப்பித் திருப்பி வரவே என் புத்தி குழம்பிற்று. இதை எப்படியாவது ஒரு முடிவுக்குக் கொண்டு வரவேண்டுமென்று தீர்மானித்து, சற்றுச் சாந்தமான குரலிலேயே, "நான் ஒன்று சொன்னால் நீ ஒன்று சொல்கிறாயே? ஏன் காப்பியைச் சூடாகக் கொண்டு வரவில்லை யென்று கேட்டால் எதிர்த்துப் பேசுகிறாயே?" என்றேன்.

"பக்கம் 49" என்று பதில் வந்தது.

49-வது பக்கத்தில் கீழ்க்கண்ட விஷயம் கண்டிருந்தது.

எதிர்த்துப் பேசல்:—தம்பதிகளில் யாராவது ஒருவர் ஏதாவது பேசினால் இதற்கு இரண்டாவது நபர் பதில் சொன்னால், இவர் முதல் நபரை எதிர்த்துப் பேசினவராகிறார். முதல் நபர் இதற்குப் பதிலளித்தால் இவரும் எதிர்த்துப் பேசினவராகிறார். தம்பதிகள் ஒருவரையொருவர் எதிர்த்துப் பேசக்கூடாது.

இதை வாசித்ததும், "நான்தான் முதலில் பேசினேன். இதனால் நீதான் என்னை எதிர்த்துப் பேசினாய்" என்றேன்.

"நீங்கள் ஏன் எனக்குப் பதில் சொன்னீர்கள்? நீங்கள் மாத்திரம் என்னை எதிர்த்துப் பேசலாமோ?"

"நீ என்னை எதிர்த்துப் பேசும்போது, நான் உன்னை எதிர்த்துப் பேசக் கூடாதா?"

"புஸ்தகத்தில் என்ன போட்டிருக்கிறது? தம்பதிகள் எதிர்த்துப் பேசக்கூடாது என்று இல்லையா?"

இந்த மாதிரி வழக்கு நடந்துகொண்டே போயிற்று. மணியோ பதினென்று ஆகிவிட்டது. எனக்கு வந்த கோபத்தில் என் மனைவியைப் பளீர், பளீர் என்று பத்து அறை கொடுக்கலாமா வென்று நினைத்தேன். ஆனல் பாழும் புஸ்தகத்தில் புருஷன் மனைவியை அடித்தால், மனைவி புருஷனைத் திருப்பி யடிக்கவேண்டு மென்று போட்டிருந் தால்? புத்தகத்தின்படி நடப்பது என்று நேற்றே வாக்குக் கொடுத்து விட்டேனே என்று நினைத்துக்கொண்டு, "இது என்னடா சங்கடமா யிருக்கிறது!" என்று வாய் விட்டுச் சொன்னேன். என் மனைவி உடனே பக்கம் நம்பர் சொல்லுவாள் என்று எதிர் பார்த்தேன். அவள் சொல்ல வில்லை. அந்த வார்த்தையை இன்னும் எடுத்துப் பார்க்க வில்லை போலும்! 'சங்கடம்' என்னும் வார்த்தையைப் புரட்டிப் பார்த்தேன்.

சங்கடம்:—தம்பதிகளுக்குள் சங்கடமான நிலைமை கள் ஏற்படும்பொழுது இந்தப் புஸ்தகத்தைப் பார்த்து அதில் கண்டபடி நடந்து கொள்ளவும். இதைப் பார்ப் பதனல் சங்கடம் அதிகமானல், ஈவு இரக்கமின்றி இதைக் கிழித்து அடுப்பில் எறிந்து விடவும்.

"இதோ பார், மணி பதினென்றரை யாகிவிட்டது. நம் சண்டை ஓய்ந்தபாடில்லை. சரி, புஸ்தகத்தில் என்ன சொல்லியிருக்கிறதோ, அதன்படியே நடந்து கொள்ளு கிருயா?"

"ஆகா, தடையென்ன? இதுவரையில் புஸ்தகத்தில் இருப்பதுபோல் நடக்காமல் வேறு எப்படி நடந்துகொண் டேன்?"

"சரி, இங்கே என்ன போட்டிருக்கிறது, பார்" என்று சொல்லி விட்டு, 'சங்கடம்' என்ற தலைப்பின் கீழ் உள்ள கடைசி வாக்கியத்தைக் காண்பித்தேன். மனைவி அதைப் படித்ததும், புஸ்தகத்தின் ஒரு பக்கத்தைப் பற்றி இழுத்தாள். நான் இன்னொரு பக்கத்தைப் பற்றி இழுத்தேன். புஸ்தகம் கிழிந்து, அதில் சொன்னபடியே அடுப்பிற்குப் போயிற்று. அதன் ஜுவாலையை வீணாக்காமல் ஆறின காப்பியை அதில் சுட வைத்துக் கொண்டு வந்தாள் என் மனைவி.

# புது வருஷம்

[பூலோக ஆபீஸ். டிசம்பர் மாதம் 1943-ம் வருஷம் 31-ம் தேதி. மணி இரவு 11-50. ஸ்ரீமான் 1943 மேலும், கீழும் உலாவிக் கொண்டிருக்கிறார்.]

ஸ்ரீமான் 1943 :—சட்! என்ன மனுஷன்! மணி 11-50 ஆகி விட்டது, இன்னும் ஆளைக் காணுமே! ஒரு வேளை வராமலேயே இருந்து தொலைந்துவிடப் போகிறார்! இந்த உலகத்தைக் கவனித்துக் கொள்ள வேண்டிய தொல்லை நம் தலையிலேயே இன்னும் ஒரு வருஷத்துக்கு விழுந்து விடப்போகிறது!

[ஆபீஸ் பையன் தலையைக் காட்டுகிறான்.]

என்னடா, ஆசாமி வந்து விட்டாரா, என்ன?

பையன் :—இன்னும் இல்லீங்களே, எசமான்!

ஸ்ரீமான் 1943 :—மணி 11-55 ஆகி விட்டது, இன்னும் ஆளைக் காணுமே! ஒரு வேளை வண்டி தவறிப்போய் ஆள் வரவில்லையோ, என்னமோ!.......ஐயையோ! இந்தப் பாழாய்ப் போன உலகத்தைக் கட்டிக்கொண்டு இன்னும் ஒரு வருஷத்துக்கு யார் மாரடிக்கிறது?

[ஆபீஸ் பையன் தலையை நீட்டுகிறான்.]

என்னடா, ஆள் வந்தாரா, இல்லையா?

பையன்:—அதோ வந்துகொண்டிருக்கிறார், எசமான்!

ஸ்ரீமான் 1943 :—அப்பாடா! நல்ல வேளை வந்தாரே!

[சுவரில் மாட்டப்பட்டிருக்கும் கடியாரம் டங் டங்கென்று மணி பன்னிரண்டு அடிக்கிறது. ஸ்ரீமான் 1944 உள்ளே நுழைகிறார்.]

வரவேண்டும், வரவேண்டும்! நல்லவேளை வந்தீர்களோ, நான் பிழைத்தேனே! எங்கே வராமலேயே இருந்துவிடப் போகிறீர்களோ என்று பயந்துபோய் விட்டேன்!

ஸ்ரீமான் 1944 :—எனக்கும் வரவேண்டாம் என்று தான். ஆனால் அந்த மாயக்கள்ளன், உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் விட்டால் தானே? என்னை இங்கே கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட்டான். அத்தனைக்கும் ஸ்ரீமான் 1941, ஸ்ரீமான் 1942 இவர்கள் எல்லாரும் இங்குள்ள கஷ்டங்களைப்பற்றி எனக்கு எவ்வளவோ எடுத்துச்சொல்லி யிருந்தார்கள்—

ஸ்ரீமான் 1943 :—நல்ல வேளை! அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு தாங்கள் பேசாமல் இருந்து விடாமல் வந்தீர்களே, அதுவரைக்கும் சந்தோஷந்தான்.

ஸ்ரீமான் 1944 :—என்னமோ போம்! இன்னும் ஒரு வருஷம் இந்த உலகத்தை எப்படித்தான் கட்டிக்கொண்டு அழப் போகிறேனே! நீராவது 365 நாள்தான் உத்தியோகம் பார்த்தீர், நான் 366 நாள் அல்லவா பார்த்தாக வேண்டும்?

ஸ்ரீமான் 1943 :—என்ன பண்ணலாம்? எல்லாம் ஸ்ரீமான் 1939 செய்த வேலை தான். அவர் ஆட்சி காலத்தில் ஏற்பட்ட யுத்தம் இன்னும் நின்றபாடில்லை. யுத்தத்தை என் ஆட்சி காலத்துக்குள் நிறுத்த வேண்டும் என்று எவ்வளவோ முயற்சி செய்தேன், முடியவில்லை. தாங்களாவது தங்கள் ஆட்சி காலத்துக்குள் இந்தச் சனியன் பிடித்த யுத்தத்தை நிறுத்தப் பாரும்.

ஸ்ரீமான் 1944 :—நான் யுத்தத்தை நிறுத்துவது இருக்கட்டும், வங்காளத்தில் பஞ்சத்தினால் ஜனங்களை ஒரேயடியாகச் சாக விட்டு விட்டீர்களாமே! இப்படிப்பட்ட நிலைமை ஏற்படும்படி ஏன் ஐயா விட்டீர்!

ஸ்ரீமான் 1943 :—(திகிலடைந்தவராய்) வங்காளப் பஞ்ச சமாசாரம் உமக்கு யார் ஐயா சொன்னது?

ஸ்ரீமான் 1944 :—பின் உம் ஆட்சியின் ஊழல்கள் எல்லாம் ஒருவருக்கும் தெரியாது என்று நினைத்தீரா, என்ன? ஸ்ரீமான் சூரியனும், ஸ்ரீமான் சந்திரனும் தான் இந்த கோரக் காட்சியைத் தினம் பார்த்துக் கொண்டிருக்கிறார்களே! அவர்கள் தான் சொன்னார்கள். வேறு யார் சொல்லுவார்கள்?

ஸ்ரீமான் 1943 :—என்னமோ போங்கள்! இத்தனைக்கும் நான்தான் பொறுப்பாளி என்று பகவான் என்னுடன் சண்டைக்கு வரப்போகிறார். ஆனால் உண்மையில் ஸ்ரீமான் 1942 தான் இதற்கெல்லாம் காரணம்.

ஸ்ரீமான் 1944 :—உம் ஆட்சியில் நடந்த காரியங்களுக்கு அவர் என்ன ஐயா பண்ணுவார்? அவர் இருக்கிறார் "தேமே"ன்னு தேவலோகத்தில். அவர் தலையை எதற்காக ஐயா போட்டு உருட்டுகிறீர்?

ஸ்ரீமான் 1943 :—ரொம்ப அழகாய் இருக்கிறது! அந்த மனுஷன் தன் ஆட்சியில் காங்கிரஸ் தலைவர்களைச் சிறையில் பிடித்துப் போடத்தான் இந்தியாவில் இத்தனை அனர்த்தம் விளைந்து விட்டது! காங்கிரஸ் தலைவர்கள் மாத்திரம் வெளியில் இருந்தால் வங்காளப் பஞ்சம் ஏற்பட்டிருக்குமா?

ஸ்ரீமான் 1944 :—ஏன், அவர்களை நீர்தான் உம் ஆளு கையில் விடுவிப்பதற்கென்ன ? பிரமாதமாக ஸ்ரீமான் 1942 மீது குற்றம் சொல்ல ஆரம்பித்து விட்டீரே !

ஸ்ரீமான் 1943 :—எல்லா வேலையையும் உமக்கு என்று தான் விட்டு வைத்திருக்கிறேன். காங்கிரஸ் தலைவர்களை விடுவிக்கும் புகழை நீர் தான் கட்டிக்கொண்டு போமே ! உம் ஆட்சி காலத்திலேயே யுத்தத்தையும் நிறுத்தி வையும், அந்தப் புகழையையும் கட்டிக் கொள்ளும் !—சரி, நாழியாகிறது, நான் போய் வருகிறேன்.

[போகப் புறப்படுகிறார்.]

ஸ்ரீமான் 1944 :—ரொம்ப சாமர்த்தியமாகத்தான் பேசுகிறீர்....(மேஜையில் இருக்கும் கடிதம் ஒன்றைப் பார்த்துத் திடுக்கிட்டு) ஓய் ! இது என்ன ஐயா புதுசாக இருக்கிறது ! நான் வந்ததும் கள்ளுக்கடைகளைத் திறக்க வேண்டும் என்று உத்தரவு போட்டிருக்கிறீரே, என்ன சமாசாரம் ? வந்ததும், வராததுமாக நான் கெட்ட பெயர் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்பது உம் எண்ணமா, என்ன ?

ஸ்ரீமான் 1943 :—எல்லாம் உம் நல்ல பெயருக்காகத் தான் செய்திருக்கிறேன். கள்ளுக் கடைகளைத் திரும்ப மூடி வைத்து நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ளுமே ! நான் போகிறேன், நாழியாகி விட்டது !

ஸ்ரீமான் 1944 :—ஈச்வரா !

[கீழே சோர்ந்து விழுகிறார். இதுதான் சமயமென்று ஆபீஸ் பையன் கிண்டி ரேஸ் போகிறான்.]

வாகீஸ்வரி அச்சு நிலையம், சென்னை:—5-1-46.
For Nadodi P. I. Card Q. H. No. Ms. 120. Copyies 2000.